"கற்றோர்க டாமுகப்பர் கல்விதனி லாசையுள்ளோர்
பெற்றோ மெனவுகந்து பின்புகற்பர்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னெஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

# விவேக சிந்தாமணி.

அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

புத்தகம். 1. 1893௵ ஏப்பிரல்௴ இலக்கம். 12.

## சந்திரனைப்பற்றிய சிலவிஷயங்கள்.

ஒருகாட்டில் ஓர் அரசயானை பல யானைகளோடு கூடிக்கொண்டிருக்கும்போது அங்கே மழையில்லாமையால் ஏரி குளங்கள் எல்லாம் வற்றிப்போக தண்ணீர் கிடையாமல் தாகத்தால் வருந்தி நெடுந்தூரம் தேடி கடைசியில் தண்ணீர்தங்கிய தடாகத்தைக் கண்டது. உடனே தன் பரிவாரத்துடன் அதிலிறங்க அங்கே வாசம்பண்ணிக் கொண்டிருந்த முயல்களில் சில யானைகளின் கால்களின் கீழ்ப்பட்டு இறந்தன. மற்றும் சில முயல்களுக்கு கால் கைகள் ஒடிந்தன. இவ்விதம் நாசம்செய்து அந்த யானைகள் போனபிறகு மீதியிருந்த முயல்கள் கூடி வேறோரிடம் தேடிச் செல்லவேண்டுமென்று விசனத்துடன் யோசனைசெய்யத் தொடங்கின. அப்பொழுது அனுபவம் முதிர்ந்த ஒரு கிழமுயல்: 'நன்றாயிருக்கிறது, பூமி உண்டானதுமுதல் நாம் தங்கியிருக்கிற இந்த இடத்தை விட்டுப் போவது அழகாயிருக்கும்! ஏதாவது உபாயம் செய்து இந்த மூடயானைகளை முடுக்கவேண்டுமேயல்லாது வேறு யோசனை கூடாது' என்று சொல்லவே, மற்றமுயல்கள்: 'ஓய், கிழவனாரே! அந்த உபாயம் இன்னதென்று சொல்லும்' என்று ப்ரிகாசமாய்க் கேட்க, அதற்கு அந்த முயல் 'யானைகள் இவ்விடம் வாராதபடி தடுப்பதை எனக்கு விட்டுவிடுங்கள்' என்று சொல்லி அங்கே நின்றும் புறப்பட்டு யானைகள் வரும்வழியில் ஓர் மேட்டில் உட்கார்ந்து கொண்டது. அப்படியே யானைகள் வந்தவுடன் அந்த முயல் 'அடா அரசயானையே!' என்று அதட்டிக்கூவி, 'அடா, நான் சந்திர தேவனுடைய தூதன், நான் அவரிடத்திலேயே எப்பொழுதும் தங்கியிருக்கும் முயல், அவருடைய பள்ளியறையாகிய தடாகத்தை நீங்கள் கலக்கிவிட்டீர்களென்று அவர் உங்களெல்லாரையும் கொல்ல எண்ணியிருக்கிறார்;' என்றுசொல்ல, யானைகள் 'இவர் சந்திரமண்டலத்து முயல், பெரியஇடத்துப் பகைஉதவாது' என்று அன்றுமுதல் அவ்விடத்தைவிட் டொழிந்தன;—என்ற இக்கதையை நாம் பஞ்சதந்திரத்திற் படித்திருக்கிறோமல்லவா? அந்த முரட்டு யானைகளை மோசம்செய்த மூட முயலையே நாம் நமது வானசாஸ்திர பண்டிதரென்று கொண்டு சந்திரனிடத்துத் தோன்றும் கரியஉருவம் முயல்தானென்று தீர்மானம் செய்துவிடலாமா? அல்லது தக்க கருவிகளைக்கொண்டு பரிசோதித்து அறியலாமா? இக்காலத்திலோ தக்க கருவிகளுக்குப் பஞ்சமில்லை. தூரதிருஷ்டிக் கண்ணாடியென்று ஓர் விதக் கருவியுண்டு. அதன் வழியே தூரத்திலுள்ள பொருள்களை நாம் பார்ப்போமானால் அவைகள் சமீபத்திலுள்ள பொருள்கள்போலக் காணப்படும். இந்தக் கருவியைக்கொண்டு 'அம்பிலிமான்தோசை'யென்றுகுழந்தைகளுக்கு சிறியதாய் வார்த்துக்கொடுக்கிற தோசைபோலிருக்கிற சந்திரனை நாம் பார்ப்போமானால் நம

க்கு அதுவெகுபெரிதாய்க் காணப்படும். அதில் உயர்ந்த மலைகளையும் வெகு தாழ்ந்த ஆழமான பள்ளத்தாக்குகளையும் நாம் தெளிவாய்க் காணலாம். சந்திரனுக்கு சுயமான ஒளி கிடையாது. சூரியனுடைய ஒளியானது அதில் உள்ள உயர்ந்தமலைகளில்தாக்க, நாம்பேசுகிறவார்த்தையின் சத்தம் சுவர்களில் தாக்கி சிலை (எதிரொலி) உண்டாவதுபோல், அம்மலைகளிலிருந்தும் நமக்குவெளிச்சமானது பிரதிபலிக்கிறது. 'கிருசன் எண்ணெய்' என்று வழக்கத்தில் சொல்லப்படும் நிலத்திராவகம் விட்டு எரிக்கும் சுவர் விளக்குகளில் கண்ணாடிக்குப் பின்னால் தட்டு ஒன்று வைத்திருப்பதை யாரும் பார்த்திருக்கலாம். அந்தத் தட்டு எவ்வளவுக் கெவ்வளவு பிரகாசமாயிருக்கிறதோ அதற்குத் தக்கபடி தீபத்தின் ஒளியும் அதிகம். அந்தத் தட்டு, நிரம்பப் பிரகாசமா யிருந்தால் தீபத்தின் ஒளியைப் பார்க்க கண்கூசும். எப்படிவிளக்கின் வெளிச்சம் அந்த தட்டில் பாய்ந்து அதினின்றும் பிரதிபலிக்கிறதோ அப்படியே உலகத்துக் கெல்லாம் தீபம் போன்ற சூரியனுடைய ஒளியானது தகரத் தட்டுபோல் தாவள்ளியமான சந்திரனிடத்துள்ள மலைகளில் தாக்க "தீம்பால் கதிர்மணிக் குடத்தி னேந்தி வீழ்தரச்சொரிவதேபோல்"* என்றபடி பாலை பளிங்குக் குடத்தி லெடுத்து ஆகாயத்திலிருந்தும் பூமியில் பொழிவதுபோல விளங்குகின்ற நிலவு ஒளியானது உண்டாகிறது. ஆகவே,

(1) வெண்ணிறநறநிறை வெள்ளமென்னவும்
பண்ணிறஞ் செறிந்திடை பரந்ததென்னவும்
உண்ணிறைகாம்பிக் கொழுகிற்றென்னவும்
தண்ணிறை நெடுநிலாத் தழைத்த தெங்குமே.
—கம்பர்.

(2) ஆறெல்லாங் கங்கையேயாய வாழிதாம்
கூறுபாற் கடலையேயொத்த குன்றெலாம்
ஈறிலான் கயிலையை யிணையச் வெண்ணினி
வேறியாம் புகல்வது நிலவின் வீக்கமே.-கம்பர்.

அதாவது, உலகத்தின் அமிர்த வெள்ளமானது பரவியது போலவும், இனிமையான சங்கீதமே[1] உருவெடுத்து எங்கும் நிறைந்ததுபோலவும், மனிதர் உள்ளத்தில் குடிகொண்டிருக்கும் அன்பானது வெளியே ததும்பி பெருகினது போலவும்[2], குளிர்ச்சி பொருந்திய நிலவானது எங்கும் இனிமையாய்த் தழைக்க, பரமானந்தத்தைத் தரும் அந்த வெளிச்சத்தில் எந்த நதியும் கங்கா நதிபோல் விளங்கிற்று. சமுத்திரங்களெல்லாம் பாற்கடல்போல விளங்கின. குன்றுகளெல்லாம் பரமசிவனது கைலாச பர்வதத்தைப்போல் விளங்கின, என்று அடங்கா குதூகலத்துடன் ஆனந்தபரவசமாய் அளவற்ற புலவர்கள் வர்ணித்துப் பாடியிருக்கும் இந்த நிலவு சந்திரனுடைய சொந்தமல்ல. சூரியனிடத்தில் கடன்வாங்கி அது நமக்குச் செய்யும் தானம். ஆயினும் சமுத்திர ஜலத்தையுண்டு பூமியில் மழையாகப் பொழியும் மேகத்தை

* உள்ளியுள்ள வெல்லா முவந்தீயுமவ்
வள்ளியோரின் வழங்கின் மேகமே

அதாவது, பிரதியுபகாரத்தை எதிர்பாராமல் கொடுக்கிற கொடையாளிகளுக்குச் சமானமாக மேகத்தைச் சொல்லவில்லையா? அதுபோல் சூரியனுடைய ஒளியை நமக்குக் குளிர உதவுகின்ற சந்திரனையும் 'இரவுக்கு அரசியே, தெய்வமே'[3] என்றும், 'ஜகத்ஜோதியே'[4] யென்றும், 'தாரகணத் தலைவனே'[5] யென்றும் பற்பலவாறுகக் கொண்டாடத் தடையென்ன இருக்கிறது.

இது நிற்க நமது தூரதிருஷ்டிக் கண்ணாடியைக்கொண்டு சந்திரனை இன்னும் பரிசோதிப்போம். சந்திரனில் முயலைக் காணோம். ஆனால் மலைகளுக்குமத்தியி லநேக குழிகள் இருக்கின்றன. அவைகளில் சூரியனுடையஒளி அதிகமாகத்தாக்காததினால் தூரத்துப்பார்வைக்கு அவை

* சிந்தாமணி. 'பாற்கதிர் பரப்பி மீனரசாண்ட வெள்ளி விளக்கத்து' என்றார் இளங்கோவடிகளும். 'பாற்கடன் முகந்து மாரிவான்சொரிந்ததேயாமென' —கம்பர்.

[1] Poerty is Universal. Shelley has the same idea very often e. g. his 'An Ariette for music.'

[2] Shelley has the same in his 'Prometheus Unbound.'

* கம்பர்.

[3] Ben Jonson. [4] Homer. [5] சிலப்பதிகாரம். இவ்வடை மொழிகள் சம்ஸ்க்ருதத்திலும் தமிழிலும் வெகு சாதாரணம்.

கள் கருப்புக் கோடுகள்போல் தோன்றுகின்றன. இவை தாம் பஞ்சதந்திரத்து யானைக்கு முயல்போல் காணப்பட்டன.

சந்திரன் பந்துபோல் வட்டமானது. அது பூமியைச் சுற்றியோடுகிறது. ஊசியைக்காந்த மிழுப்பதுபோல் உலகத்திலுள்ள ஒவ்வொரு பொருளும் மற்றைய பொருள்களையெல்லாம் தன்னிடத்திலிழுக்கிறது. பெரிய பொருளுக்கு சிறியபொருளைக்காட்டிலும்காந்தசக்தி அதிகம். பூமி சந்திரனைவிட மிகப் பெரிதாதலால் பூமி சந்திரனைச் சுற்றுவதற்குப் பதிலாக சந்திரன் பூமியைச் சுற்றிவருகிறது. அதே சந்திரனை மற்ற கிரகங்களும் தங்களிடத்தி லிழுக்கிறபடியால் அது பூமியில் தாக்காதபடி விலகி செக்கில் சுற்றும் எருதுபோல் பூமியைச்சுற்றி வருகிறது. அப்படி யொருதரம் சுற்ற 27-நாள், 7-மணி, 43-நிமிஷம் 11-வினடி ஆகிறது. சந்திரன் முதலில் ஒரு சிறு வெள்ளிக் கோடுபோல் தோன்றி பிறகு ஸ்திரீகளுடைய நெற்றிபோல் வளைந்து மன்மதனுடைய ஆக்ஞா சக்கரம் எனத் தோன்றி பிறகு தீயோருடைய செல்வம்போல் நாளுக்குநாள் தேய்ந்துவரக் காரணம் அடியில் வரும் படத்தால் அறியலாம்.




பூமியை பூ என்றும் சூரியனை சூ என்றும், சந்திரனை ச என்றும் அடையாள மிடுவோம். புள்ளிக்கோடிட்டுக் காட்டியிருக்கும் வட்டத்தின் வழியே சூரியனை பூமிசுற்றி ஓடுகின்றது. சின்ன வட்டத்தின்வழியே பூமியைச் சந்திரன் சுற்றிவருகிறது. உள் வட்டத்தில் சந்திரன் பூமியைச் சுற்றிவருகையில் சந்திரமண்டலத்தில் சூரியன் ஒளிபடும் பாகத்தை விளக்கிக் காட்டியிருக்கிறது. சந்திரன்பூமியைச்சுற்றிவருகையில் 1, 2, 3, 4, 5, 6, 7, 8, என்கிற இடங்களிலெல்லாம் அதன் ஒரு பாதி சூரியன் ஒளிபட்டுப் பிரகாசித்தாலும் அதன் பிரகாசமான பாகம் முழுமையும் பௌர்ணமை தினத்தன்று மற்றநாள்களில் பூமியிலுள்ள நமக்குத் தெரிகிறதில்லை. சந்திரன் உள்வட்டத்தில் 1, 2, முதலான ஸ்தானங்களி லிருக்கையில் அதன் பிரகாசமானபாதியில் நமக்குத்தோன்றும்பாகம் அதற்கு மேலுள்ள வெளிவட்டத்தில் காட்டப்பட்டிருக்கிறது. 1-ல் சந்திரனிருக்கையில் சூரியன்ஒளிபடாத சந்திரனின்பாதி பூமிக்குள்திரேயிருப்பதால் அன்று சந்திரனிருப்பதே நமக்குத் தோன்றுவ தில்லை. அன்றைக்குத்தான் அமாவாசியை. சந்திரன் தன் வட்டத்தின் வழியே பூமியைச்சுற்றி ஓடி 2-ல் வந்து நிற்கையில் சந்திரனுடைய வெளிச்சமுள்ள பாதியில் கால்பங்கு பூமியில் படுகிறது. (2-குறிப்பிட்ட படத்தைப்பார்க்க) அன்றைக்குத்தான் நாலாம் பிறை. 3-ல் சந்திரனுடைய வெளிச்சமுள்ள பாதியில் அரைப்பங்கும், 4-ல் முக்கால்பங்கும், 5-ல் முழுப்பங்கும் பூமியில் படுகிறது. இப்பொழுது தான் பௌர்ணமை. பிறகு 6-ல் முக்கால் பங்கும், 7-ல் அரைப்பங்கும், 8-ல் கால்பங்கும் படுகிறது. அதன்பிறகு மறுபடி அமாவாசியை. ஆகவே சந்திரன் பூமியை ஒருமுறை சுற்றிவருவதற்குள் ஒரு அமாவாசியையும் ஒரு பௌர்ணமையும் உண்டாகிறது. (மேலே, காட்டிய படத்தில் சந்திரன் ஒரு ஸ்தானத்திலிருந்து அடுத்த ஸ்தானத்துக்கு வர சுமார் $3\frac{1}{2}$நாள் செல்லுகிறதென்றறிந்து கொள்ளவேண்டியது.)

சந்திரனுடைய ஒளி சூரியனுடைய ஒளியைக்காட்டிலும் 8 லட்சம் பங்கு குறைந்தது. அது நிரம்பக்குளிர்ந்தது. அதனால்தான் சந்தி

ரனுக்கு "தண்ணன்"—குளிர்ச்சி யுடையவனென்று பெயர்.

சந்திரனுடைய சக்தியைப்பற்றி பலர் பலவிதம் நினைக்கிறார்கள். 'தண்ணன் கதிர்வரவால் பொங்கும் கடல்' * என்றபடி அலைகளுக்குச் சந்திரன் காரணம். பைத்தியம் முதலிய மனோவியாதியும் சிற்சில தேகவியாதியும் பௌரணமையில் அதிகரிக்கின்றன. உலகத்தில் நடக்கிற தற்கொலைகளில் அனேகம் பௌரணமை பிரதமைகளில் தான் நடக்கிறதென்று கணக்கு பூர்வமாகத் தெரிகிறது. † தங்களைத் தாங்களே உயிர்மாய்த்துக் கொள்பவர்கள் அந்த தினங்களை நல்முகூர்த்தமாகத்தெரிந்தெடுக்ககாரணம் யாதோ புலப்படவில்லை. சந்திரனுடைய இனிமையையும் அழகையும், குளிர்ச்சியையும், ஒளியையும் பார்க்கும்போது ஆஹா நாம் சந்திரனில் பிறந்தோமா என்று எண்ண முண்டாகலாம். ஆனால் உண்மையில் சந்திரன் பூமிக்கு எவ்வளவோ தாழ்ந்தது.

‡ தங்குறை தீர்வுள்ளார் தளர்ந்துபிறர்க்குறூஉம்
வெங்குறை தீர்க்கிற்பார் விழுமியோர்-திங்கள்
கறையிருளைநீக்கக் கருதா துலகில்
நிறையிருளைநீக்குமேனின்று.—

என்றபடி சந்திரன் தன்னுடைய குறையாகிய களங்கத்தை நீக்கிக் கொள்ளாமல் உலகத்து இருளை நீக்குவதுபோல் பெரியோர்கள் தங்கள் குறைகளைக் கூடப் பாராமல் பிறர் குறைகளை நோக்கிக் கவலைப் படுவார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் சந்திரனிடத்திலுள்ள குறைவு அதன் களங்கம் மாத்திரமல்ல. அங்கே முதலாவது நாம் சுவாசிக்கத்தக்ககாற்று கிடையாது. அதன் காற்றை ஒரு க்ஷணம் நாம் சுவாசிக்குமுன்னமே தலை கிறு கிறுத்து மூச்சு அடைத்துத் தத்தளிக்க வேண்டும். 2-வது அங்கே ஒரு பொட்டு ஜலமாவதுகிடையாது. "சாந்த சமுத்திரம்" (The sea of serenity) எனப் பெயர்பெற்ற அநேக சமுத்திரங்கள் இருந்தாலும் அவைகள் போலி சமுத்திரமே தவிர வேறல்ல. அவைகளில் ஒரு துளி ஜலமும் கிடையாது. மேலும் பூமியில் இருப்பதுபோல் அடிக்கடி அடுத்தடுத்து இரவும் பகலும் வருவதில்லை. ஒரே தொடர்ச்சியாக 14-நாள் அல்லது 336 மணி தேசகாலம் பகலும் பிறகு அவ்வளவு நேரம் இரவும் உண்டாகும். சந்திரனிலும் இரவு பகலுக்குச் சூரியனே காரணம். பகலில் அதிக உஷ்ணமும் இரவில் அதிக குளிர்ச்சியும் உள்ளது. பகல் கழிந்து இரவு வரும்போது சூரியன் மறையும். ஆனால் சந்திரனில் அஸ்தமனம் பூமியில் உள்ளதுபோல் அலங்காரமாயிராது.

* "திசைமுகம்பசந்து செம்மலர்க்கண்கள்
முழுநீர்வாரமுழுமெயும் பனித்துத்
திரைநீர்ஆடை இருநிலமடந்தை
அரசுகெடுத்தலம் வருமல்லற்காலை."

என்றபடி 'பூமிதேவிதன்புருஷனை (சூரியனைக்) காணாமல் திசையாகிய தன் நான்குமுகமும் பசப்பூரப்பெற்றுப் புஷ்பங்களாகிய கண்கள் நீர் சொரிய சரீரமுழுதுங் குளிர்ந்து வருந்தப்படும் அஸ்தமனவேளை' யென்று அலங்காரமாய்ச் சொன்னபடி வானமெல்லாம் சிறுபக்கமும் சிவந்து பார்த்தவர் உள்ளத்தை உருக்கத்தக்க அழகு வாய்ந்த அஸ்தமனம் சந்திரமண்டலத்தில் கிடையாது. சூரியன் களைத்தவன் போல் திடீரென்று சந்திரனிடமிருந்து விடை கூடப் பெற்றுக் கொள்ளாது மறைந்து போய் விடும். சந்திரனில் புல்பூண்டு கிடையா. பக்ஷி மிருகம் கிடையா. மனிதன் என்ற பேச்சே கிடையாது. வீசி அடிக்கும் காற்றுக்கிடையாது. ஒருவர்க்கொருவர் பேசினால் கேளாது. ஆனால் பொன் முதலிய உலோகங்கள் ஏராளமாய் உண்டு. அங்கிருக்கும் மலைகள் சிவப்பு, மஞ்சள், நீலம் முதலிய பலவர்ணங்களாய் இருந்தாலும் பார்வைக்கு அதிக அருவருப்பாயிருக்கும்.

சந்திரனில் பகலில்கூட நக்ஷத்திரங்கள் புலப்படும். சூரியமண்டலத்திலுள்ள மலைகள் தெரி

---

* நன்னெறி. Shelley and Shakespeare use this simile very often, so also several others.

† Morselli's 'Suicide.' International Scientific Series.

‡ நன்னெறி.

* சிலப்பதிகாரம்.

யும். நம்முடையபூமி அங்கிருந்து பார்ப்பவர்களுக்கு 2-அல்லது 3 கஜகுறுக்களவுள்ள ஒரு கோளமாகத் தோன்றும், சந்திரனில் இரவாயிருக்கும்போது பூமிதான் அதற்கு முக்கிய ஒளியைத்தரும். ஆனால்அவ்வொளி நிலாவைப் போல் பிரகாசமாய் ஆனந்தமாயிராது.

நாம் தப்பித்தவறி சந்திர மண்டலத்துக்குப் போய்விட்டோமானால் இறகு கட்டினவர்களைப்போல் ஒரு மலையிலிருந்து மற்றொரு மலைக்குத் தாவலாம். பெரிய குன்றுகளைச்சுலபமாய் உருட்டலாம். அநேகமாயிரம் மயில்களை சொற்பநேரத்தில் சுற்றிவரலாம்.நமக்கு அங்கே கீழேகால்பாவுகிறது வருத்தம்.* அங்கே மனிதர்கள் கீழே கால் ஊன்றி நடக்கவேண்டுமானால் நம்மைப்போல் 6 மடங்கு வளர்ச்சியுள்ளவர்களா யிருக்கவேண்டும்.

இம்மாதிரி ஜனங்களும் அவர்களுக்கேற்ற மற்ற ஜீவஜெந்துக்களும் சந்திரமண்டலத்தில் ஒருகாலத்தில்வசித்துக்கொண்டிருந்ததாகவும், சந்திரன் ஆதியில் தற்காலத்திலுள்ளபடி மயானக்கரைபோல் பாழாயிருக்கவில்லை யென்றும் பலர் தீர்மானிக்கிறார்கள். அநேக ஆயிரம் வருஷத்துக்கப்பால் பூமியும் இப்பொழுது சந்திரன் இருப்பதுபோல் உயிர்ப்பிராணிகளின் வாசத்துக்கு யோக்கியமில்லாமல் மாறிவிடுமென்று பயப்படுகிறவர்களும் உண்டு. ஆனால் இனிமேல் உண்டாகிற விஷயங்களைப் பற்றித் திட்டமாய்த் தீர்மானிப்பது கேவலம் மனிதர்களாகிய நமக்கு அசாத்தியமன்றோ. அளவற்ற அண்டங்களனைத்தையும் அமைத்துக் காத்து அழிப்பதைத் தமக்கு அநாயாசமான ஓர் 'விளையாட்டர்ய்' †க்கொண்டுள்ள சாக்ஷாத் ஈசுவரனுடைய உட்கருத்தின் இரகசியத்தை அற்பஅறிவினராகிய நாம் அளக்கத் துணிவது 2,40,000 (2-லக்ஷத்து 40 ஆயிரம்) மயில்களுக்கு அப்பால் உள்ள சந்திரனை நமது 2-முழக்கைகளால் எழும்பி எட்டிப்பிடிக்க எத்தனித்தல் போலும்.

பி. ஆர். ராஜமய்யர், பி. ஏ.

*இதற்குக்காரணம் சந்திரனுடைய காந்தசக்தி பூமியுடையதைக்காட்டிலும் குறைந்ததாதலால் அதில்பொருள்களின் கனமும் குறைவு. இதை சென்ற பிப்ரவரி மாசத்துச் சஞ்சிகையில் பரக்கக்காணலாம்.

† கம்பர்.

## சுதந்தரங்களின் விளக்கம்.

2-ம். அத்தியாயம். (முடிவு)

(326-வதுபக்கத் தொடர்ச்சி)

**11.** நிலத்தில் மனிதருக்குள்ள சுதந்தரம் மேற்கூறியபடி எற்பட்டபிறகு அதிலிருந்து உற்பத்தியாகும் மரவர்க்கங்களெல்லாம் நிலத்தின் சொந்தக்காரனுக் குரியதென்பதற்குச் சந்தேகமில்லை, சொந்தக்காரனது அனுமதியில்லாது அவற்றை வேறொருவரும் தங்களுக்குபயோகித்துக் கொள்ளக்கூடாது. எனெனில், அவற்றின் வளர்ச்சிக்குப்பெரும்பாலும் அவனது பிரயத்தினமும் சாக்கிரதையும் முக்கிய காரணங்களாயிருப்பதாய் நாம் காண்கிறோம். நிலத்தில் சொந்தக்காரனால் வளர்க்கப்பட்டு விருத்தியடையும் நாய், கோழி, முதலிய ஜந்துக்களும் அவனுக்கே சொந்தமாகின்றன. ஒருவராலும் இரட்சித்து வளர்க்கப்படாது காட்டுத்தன்மையில் தாமே விருத்தியடைகின்ற பூண்டுகள், விலங்குகள் விஷயத்தில், அவை தன்னுடைய நிலத்தை விட்டுப்பெயர்ந்து ஓடிப்போகாமல் நிலத்தின் சொந்தக்காரன் காத்துவரக் கூடுமாகில், அவற்றிற்கும் அவனே சொந்தக்காரனாகலாம். இப்படி காட்டுத்தன்மையில் தாமே விருத்தியடைந்துவரும் மரங்கள் மிருகங்களைத் தவிர, உபயோகமுள்ள வேறொரு விளைவுமில்லாத நிலத்தை ஒருவனுடையபிரத்தியேகசுதந்தரத்திற்குட்படுத்த யாதொரு நியாயமில்லையென்று நிலத்திலுள்ள சுதந்தரத்தைப்பற்றி நாம் மேல் விவரித்திருப்பதனால் விளங்கலாம். ஆகிலும், ஒருவன் தனது முயற்சியினால் இப்படிப்பட்ட நிலத்தையும் விருத்தியடையும்படி செய்வதாக ஏற்படும்பொழுதும், அதிலுள்ள காட்டு மிருகங்களை சனங்கள் வேட்டையாடி உபயோகித்துக்கொள்வதைக்காட்டிலும் அதிகலாபமுண்டாமென்று நிச்சயிக்கக் கூடுமானால்,துரைத்தனத்தார் அந்நிலத்தை விற்றாகிலும் குத்தகைக்கு விட்டாகிலும் உபயோகப்படும்படி செய்ய வேண்டியது.

தரையின்மட்டத்திற்குக்கீழிருந்து அகப்படும் உலோகங்கள் நிலத்தின் சொந்தக்காரனுடைய முயற்சியினால் உற்பத்தியாவதில்லை; ஆகையால்

அவற்றைத் துரைத்தனத்தாருக்குச் சேர்த்து விடவேண்டும். இப்படி கிடைக்கும் உலோகங்கள் அற்பவிலையுள்ளனவாகவும் சாதாரணமாய் எவருக்கும் கிடைக்கக் கூடியனவாகவு மிருந்தால், நிலத்தின் சொந்தக்காரன் அவற்றை துரைத்தனத்தாருடையவும் பிறருடையவும் நிர்ப்பந்தமின்றி தானே எடுத்துக்கொள்ளலாம். அவற்றைக் கண்டுபிடித்துக் கிளப்பி எடுக்கும் முயற்சிக்கு வெகுவாய் மீறியிருக்கும் விலை உயர்ந்த உலோகங்கள் விஷயத்தில், அம்முயற்சிக்குத்தக்க கூலியையும் புதையலைக்கண்டு பிடித்தற்கு விசேஷமாகியஞானமும் பிரயத்தினமும் செலவழிக்கப்பட்டிருந்தால் அதற்குத்தக்க வெகுமதியையுங் கொடுத்து, பாக்கியைத்துரைத்தனத்தார் இராச்சியத்தின் பொது நலத்திற்கு உபயோகப்படுத்திக்கொள்ள வேண்டியது; இதற்கு நிலத்தின் சொந்தக்காரனுக்கு யாதொரு சுதந்தரமுமில்லை. நிலத்தின்கீழ் புதைக்கப்பட்டிருக்கும் விலையிலாவது உபயோகத்திலாவது உயர்ந்த உலோகங்களைக்கண்டு பிடித்துக்கிளப்பிஎடுத்தற்குத்தகுந்தவர்களைநியமித்துவேண்டிய முயற்சி செய்துகொள்வதற்கும், தகுந்தபடி புதையல் கிடைத்தால் அதைத்தங்கள் கைவசப்படுத்திக்கொள்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச்செய்து கொள்வதற்கும், நிலத்தின் சொந்தக்காரனுடைய சுதந்தரங்களால் துரைத்தனத்தார் ஒருவிதத்திலும் தடுக்கப்படுவதில்லை.

கடலிலும் கப்பலோடத்தக்க ஆழமுள்ள ஆறுகளிலும் ஒருவருக்கும் பிரத்தியேகமாய்ச் சுதந்தரம் உண்டாவதில்லை. ஏனெனில், அவை சனங்களுக்குப் பொதுவாயிருத்தலால் உண்டாகும் பிரயோசனம் பிரத்தியேகமாய்வெவ்வேறு மனிதரின் சுதந்தரங்கட்கு உட்படுவதாலுண்டாவதைக்காட்டிலும் அதிகமென்பதற்குச்சிறிதேனும் சந்தேகமில்லை.

சில விடங்களில் நீரோட்டங்கள், கடல்கள் முதலியன ஒதுங்கிப்போவதாலும் மேடிட்டுப் போவதாலும் அயலிலுள்ள நிலத்தோடு நிலம் சேருகையில், இப்புதிய நிலம் முன்னுள்ளநிலத்தின் சொந்தக்காரனுடைய சுதந்தரத்திற்கு உட்படுவதில்லை; அது முழுவதும் துரைத்தனத்தாரையே சேர்ந்து பொது நலத்திற்குபயோகப்படவேண்டியது. ஏனெனில், அயலிலுள்ள நிலத்திற்குரியவனுடைய யாதொரு முயற்சியுமில்லாமல் இயற்கையாகவே இப்புதிய நிலம் உண்டாயிற்றென்பது வியக்தமாயிருக்கின்றது.

சொத்துக்குச் சொந்தக்கார னொருவனும், அதை ஒருவாறு உபயோகித்துக்கொள்ளுவதற்குள்ள சுதந்தரத்தையுடையவன் மற்றொருவனுமாய் இருக்கலாமென்பது இதற்கு முன் கூறப்பட்டிருக்கும் சில உதாரணங்களால் விளங்கக்கூடியது. அசையும் பொருள்கள் விஷயத்தில், அவை தங்கள் சொந்தக்காரனல்லாத ஒருவனால் சிலகாலம் உபயோகிக்கப்பட்டு பின் தங்களுடைய சொந்தக்காரனிடம் மீண்டுவருவதினால் மாத்திரமே அவை இச்சங்கதிக்கு திருஷ்டாந்தமாகின்றன வென்று நாமறியலாம். நிலத்திலோ, சொந்தக்காரனுடைய அனுபவத்திலிருந்தும், அவன் அதில் தனக்குள்ள சுதந்தரத்தைச் செலுத்திக்கொண்டு வருகையிலும், பிறரும் அதன்வழியாய் நடத்தல், அதில் தங்களுடைய ஆடுமாடுகளை மேய்த்தல்முதலியசுதந்தரங்களைச் செலுத்திவரலாம். அனேகமாய் தற்காலத்தில் இப்படிப்பட்ட சுதந்தரங்கள் நிலத்தின் சொந்தக்காரனுடைய சம்மதத்தினாலும் சுயேச்சையினாலும் மாத்திரமே பிறருக்குக் கிடைக்கக்கூடியனவா யிருக்கின்றன. இப்படி சொந்தக்காரனுடைய சம்மதத்தாலாவது வேறுவிதத்தாலாவது நிலத்தில் பிறருக்கு சுதந்தரங்களுண்டாகையில், அவற்றை நிறைவேற்றிக் கொள்ளுவதில் சொந்தக்காரனுடைய சுதந்தரங்களை மீறுதும் அவனுக்கு நஷ்டம் விளைக்காமலும் நடந்து கொள்ளவேண்டும்.

நூதன யந்திரங்கள், நூதன கிரந்தங்களாகிய இவற்றை யுக்தியினால் கண்டுபிடித்துஉண்டு பண்ணுகிறவர்களுக்கு அவற்றைப்போன்ற வேறு பிரதிகளை பிறர் உண்டாக்கி லாபமடைவதைத்தடுத்து அவர்கள் மாத்திரம் அவற்றாலுண்டாகும் லாபத்தை அனுபவிக்கும் சுதந்தரத்தைத் துரைத்தனத்தார் ஏற்படுத்த வேண்டியது நியாய மென்பதைப்பற்றி விவரிக்க வேண்டியதில்லை. இச்சுதந்தரமும் சொத்திலுள்ள சுதந்தரங்களிலொன்றே. இச்சுதந்தர மில்லாவிட்டால் மனிதர் தங்களுடைய யுக்தி, சக்தி,

அனுபவம் முதலியவற்றைச் செலவழித்து நூதனமான ஞானத்தையும் கருவிகளையும் கண்டுபிடிப்பதில் ஊக்கத்தை யிழந்து விடுவார்கள்; இவ்வூக்கம் மாய்ந்துவிட்டால், உலகத்தில் நாகரீகம் அபிவிர்த்தி யாகாமல் மனிதரின் சுகானுபவத்திற்கு அபாயம் நேரிட்டு விடும். ஆகிலும் இச்சுதந்தரம் சிலகாலம் வரைக்கும்மாத்திரமே மேற்கூறப்பட்ட நூதனகற்பனை செய்பவர்களுக்கு உறியதென்று அறிய வேண்டியது; 30-40 வருஷங்களுக்குமேல் ஒருவரால் கற்பித்து நிர்மாணஞ் செய்த நூதனகருவிகளின் பிரதிகளை யாவரும் உண்டாக்கி விற்றுக்கொள்ளலா மென்று பலதேசங்களிலும் சட்டத்தினுல் விதிகள் ஏற்பட்டிருக்கின்றன. இதற்குக் காரணம் யாதெனில், உலகத்தில் மனிதரின் ஞானமும் நாகரீகமும் படிப்படியாய்விருத்தியடைந்து வருதலால், நாளடைவில் ஒருவரில்லாமற் போனுலும் மற்றொருவர் இத்தகைத்தான நூதன கருவியை யாவது கிரந்தத்தையாவது கண்டுபிடித்து விடுவார்களென்றே நாம் நிச்சயிக்க வேண்டியது.

மனிதர் தம்மில் உடன்படிக்கைகள் செய்து கொள்ளுவதினு லுண்டாகும் சொத்திலுள்ள சுதந்தரங்களைப்பற்றி 3-வது அத்தியாயத்தில் உடன்படிக்கைகளைப்பற்றி எழுதுங்கால் பிரஸ்தாபிப்போம்.

12. கடைசியாக, ஒருவனுக்குச்சொந்தமாய் விட்ட சொத்திலுள்ள சுதந்தரத்தைப்பற்றியாலோசிக்க வேண்டியிருக்கிறது. இவ் வத்தியாயம் 7-வது பிரிவில் பிரஸ்தாபித்திருக்கிறபடி, சொத்திலுள்ள சுதந்தரம் இரண்டு வகைப்பட்டது. அப்பிரிவில் இரண்டாவது வகுப்பிற் சொன்னபடி ஒருவருக்கும் சொந்தமாகாதசொத்திலுள்ள சுதந்தரத்தின் இலக்கணத்தைப்பற்றி இது வரையில் பிரஸ்தாபித்து வந்தோம். இனி சொந்தமாய் விட்ட சொத்திலுள்ள சுதந்தரத்தைப்பற்றி சுருக்கமாய்ச் சொல்லி முடிப்போம்.

இவ்வகுப்பிலடங்கிய சொத்தை சொந்தக்காரனுல் தானஞ் செய்யப்பட்டாவது, விற்கப்பட்டாவது, மரணசாதனத்தால் வினியோகஞ் செய்யப்பட்டாவது மாத்திரமே பிறர் அடையலாம். சிலவேளைகளில் சொந்தக்காரன் தன் சொத்தைதனக்கு உபயோகமற்றதென்று களைந்தபின் அதைப்பிறர் தங்களுக்கு உபயோகமுள்ள தென்று நினைத்து சுவீகரித்துக்கொள்ளலாம். இப்படி பொருட்கள் கைவிட்டு கைமாறுவதும் சகஜமே; பின் அவற்றைக் களைந்தவர்க்கு ஒருவித பாத்தியமுமில்லை யென்பதும் உறுதியே.

மேலும் ஒரு சொத்தை ஒருவன் தனது முயற்சியால் அடைந்திராவிடினும், பிறராவது ஜனசமூகத்தாருடைய பிரதிநிதியாகிய துரைத்தனத்தாராவது தடுக்காது நெடுங்காலம் அனுபவித்து வந்தபின்,உண்மையான சொந்தக்காரன் யார் என்பதைக்கண்டுபிடித்தல் வெகு பிரயாசமானபடியாலும், ஒருவன் அச்சொத்து தனதென்று சட்டப்பிரகாரம் ஸ்தாபித்தற்குக் கொண்டுவரும் பிரமாணங்கள் பெரும்பான்மை துர்ப்பலமாகவே இருக்கவேண்டியதாலும்,வீணை சிரமத்தை எடுத்து பின் ஏமாறுதலா லுண்டாகும் துன்பத்தை அடையாமல் சனங்களை இரட்சித்தற்கு வேண்டி நெடுநாளாய் யாருடைய வசத்திலிருக்கிறதோ அவரே அச்சொத்திற்குச் சொந்தக்காரராகும்படி சட்டத்தினுல் காலநிர்ணயம் செய்யவேண்டியது. இதற்கு தொன்றுதொட்டுள்ள உரிமை என்று பெயர். இவ்விதியானது ரோமாபுரி ராச்சியத்தில் துவாதச சாஸனங்கள் என்று வெகு பெயர்பெற்ற புராதனமாகிய விதிகளி லொன்று. ஆனுல் அவ்விதியினுல் விதிக்கப்பட்டிருந்த காலத்தின் அளவுமிகவும் சுருங்கியதே; அதாவது, சிலவற்றிற்கு இரண்டுவருஷமும் நியமிக்கப்பட்டிருந்தன. நூதன நாகரீகம் விருத்திபெற்றுவரும் மேற்றிசையிலுள்ள சங்கங்களில், தர்மசாஸ்திரத்திற் பயின்றவர் வெகுகாலம் வரைக்கும் காலஹரணத்தினுல் கிடைப்பதாகிய சொத்திலுள்ள சுதந்தரத்தைப்பற்றி விதி செய்ய மனமில்லாமலே இருந்தார்கள். அங்கிலேயர் நாட்டில் 17-ம் நூற்றுண்டின் தொடக்கத்தில் 1-வது ஜேம்ஸ் என்னும் அரசன் ஆளுகையில்தான் இவ்விஷயத்தில் முதலில்ஒரொழுங்கு ஏற்படுத்தப்பட்டது. இதற்கு முக்கியகாரணம் கிரிஸ்திய குருவரின் ஸமாஜத்தாருடைய மனதின்மையே. தம்ம

தத்தின் இரட்சிப்புக்காக ஐரோப்பாவிலுள்ள கிரிஸ்திய ஜனங்கள் சொத்துக்களை ஏராளமாய் தாங்கள் சேர்ந்த சமயபேதத்திற்குரிய குரவ ஸமாஜத்துக்கு விட்டுவந்ததில் அச்சமூகத்தார் இப்படிவிட்ட சொத்தில் தங்களுக்குள்ள பாத்தியதையை காலஹரணத்தால் எள்ளளவும், இழந்துவிட மனமில்லாதிருந்ததினால், மேற்கூறியபடி விதி ஏற்படுவதைத் தடுத்துக்கொண்டே வந்தார்கள்.

ஒருவன் தொடக்கத்தில் சொத்தை மோசத்தாலாவது பலாத்காரத்தாலாவது தன் கைவசப்படுத்தியிருந்தால் அவன் விஷயத்தில் இவ்விதி புலன்படாதவண்ணம் சட்டம் ஏற்படவேண்டுமென்று விரித்துக்கூற வேண்டியதில்லை. ஆகிலும் இவ்விஷயத்தில் நாம் கவனிக்க வேண்டிய விலக்கொன்றுளது. சில தேசங்களில் சிலகாலங்களில் துரைத்தனமுறையே தவறும்படியான கொடுங்கலகங்களுண்டாவதில், சொத்துக்கள் விஸ்தாரமாய் கைவிட்டு கைமாறும்படி சம்பவிக்கலாம். பிற்காலம் குழப்பம் நீங்கி சமாதானம் நிலைபெறுங்கால் நடுவிற் சம்பவித்தவிஸ்தாரமான மாறுபாடுகள் எவ்வளவு அநீதமாயிருந்தாலும் அவற்றை ஒருவாறு பொறுப்பதே நலமென்று துரைத்தனத்தைநிர்வகிப்பவருக்குத் தோற்றினால், அம்மாறுபாடுகளை நிலைபெறச் செய்வது பிழையல்ல. ஏனெனில், மறுபடியும் சொத்தில் விஸ்தாரமான மாறுபாடுகள் செய்யவேண்டியதாய் நேரிடுமாகையால், நாட்டில் ஜனங்களுக்கு அதிருப்திமிகுவதற்கும் மேன்மேலும் கலகங்கள் சம்பவிப்பதற்கும் இடமுண்டாகலாம்.

13. சிலவிதமான சொத்துக்கள் மனிதருக்குள் வழங்குவது அவருக்கு வெகு இழிவானதென்றும் நாகரீகத்தின் விருத்திக்குத்தகாததென்றும் ~~உலகத்தில் நூதன நாகரீகத்தின் விருத்திக்குத் தகாததென்றும்~~ உலகத்தில்நூதன நாகரீகப்பயிற்சியில் தேர்ந்திருக்கிற மேற்றிசையார் அவற்றையிகழ்ந்து வெறுத்துக்களைந்திருக்கிறார்கள். முதலாவது, மனிதனை அடிமையாக்கி அவரது சுதந்தரங்களை பலாத்காரத்தாலோ அல்லது மோசத்தாலோ இழக்கச்செய்து ஆடுமாடுகளைப்போல் விற்றல், வாங்கல், வளர்த்தல், உழைப்பித்தல் முதலானவை தற்காலத்தின் சீரின் மிகுதியாற் சிறப்புற்றோங்கும் சங்கங்களிற் சிறிதேனுமில்லை. 60-வருஷங்களுக்கு முன் அங்கிலேய துரைத்தனத்தார் வெகு பணம் செலவிட்டு, அடிமைகளைவிடுவதால் சொந்தக்காரர்களுக்குண்டாகும் நஷ்டத்திற்குத் தகுந்த ஈடுசெய்து, அங்கிலேயரின் தலைமைக்குட்பட்டிருக்கும் எல்லா நாடுகளிலிருந்தும்இம் மகாபாதகத்தைத் தொலைத்தார். இரண்டாவது, சங்கத்தின் பொது நலத்திற்காக ஏற்பட்டிருக்கும் பொறுப்புடன் கூடிய துரைத்தன உத்தியோகங்களைச் சாதாரண சொத்தைப்போல் விற்று அவற்றைப் பணங்கொடுத்து வாங்குகிறவர்கள் அதிகாரத்தைச் செலுத்துங்கால் பெறக்கூடிய வரும்படியைக் கொண்டு லாபமடையும்படி செய்வதாகிய ஏற்பாடு இப்பொழுது அநேகமாய் இல்லை. ஏனெனில், இவ்வேற்பாட்டினால் வருந்தியவருக்கு நாளுக்கு நாள் துன்பம் மிகுவதே தவிர துரைத்தனத்தாருக்காவது பிறருக்காவது ஒரு விதத்திலும் நற்பயனுண்டாவதற்கிடமில்லை. உதாரணமாக, மகம்மதியர் இத்தேசத்தில் ஆண்டு வருகையில் வங்காளம், பாஹார் முதலிய தேசங்களில் ஜமீன்தார்கள் என்னும் ஒப்பந்தக்காரரை நியமித்து அவரால் இவ்வளவு தொகை செலுத்தப்படவேண்டும் என்பதை உடன்படிக்கை செய்து நிர்ணயித்து இராச்சியத்தை மாகாணங்களாய்ப் பிரித்து வரிகளை வசூல் செய்து வந்ததில், அச்சமீன்தார்கள் தங்களுடைய கொடுமையாலும் துராசையாலும் மனஞ்சென்றபடி பணத்தைப் பிடுங்கிவந்ததினால் சனங்கள் மிகுந்த நஷ்டத்தையும் துயரத்தையுமடைந்து வந்தார்கள். மூன்றாவது, சில சாமான்களையுற்பத்தி செய்வதற்குள்ள சுதந்தரத்தை ஒருவருக்கே கொடுத்துவிடுவதால், அது அவருடைய சொத்தாய் விடுகிறதென்பது தெளிவாய் விளங்கக்கூடிய சங்கதி. முற்காலத்தில் அரசர்கள் தங்களுடையவும்தங்களுடைய அன்பர்களுடையவும் லாபத்தைக்கருதி இவ்வேற்பாட்டை தாராளமாய்க் கொண்டாடிவந்ததினால், அவர் சாமான்களின் விலைகளைத்தம்மனஞ் சென்றபடி உயர்த்திசனங்களை வருந்தச் செய்தார்கள்.

மேற்கூறிய மூன்றுவிதக் கொடுமைகள் இப்பொழுது அனேகமாய் நூதன நாகரீகத்தைக் கொண்டாடிவரும் தேசங்களிலிருந்து அகன்று போய்விட்டன. நமது தேசத்தில் தற்காலத்திய அங்கிலேய அரசாட்சியில் உப்புவரியைத் தவிர இவற்றைப்போன்ற கொடுமைகளில்லையென்று சொல்லவும் வேண்டுமோ? இவ்வுப்புவரியும் நமது துரைத்தனத்தில் நெடுநாள் வழங்கிவருமென்று சொல்லுவதற்கிடமில்லை. அது நீடித்து வாழ்ந்துவந்தால் நம்மவரின் அறிவீனமும் முயற்சியின்மையுமே அதற்குக்காரணங்களாகுமேயன்றி, செங்கோற்செலுத்த விரதம் பூண்டிருக்கும் நமது துரைத்தனத்தார் மேல் பிழையைச் சுமத்தமுடியாது.

கி. சுந்தரராமன், எம். ஏ.

## அருணாசலக் கவிராயர்.

அருணாசலக் கவிராயர் என்னும் நாமதேயத்தைப்பெற்ற நம் தமிழ்ப் பாவலர், சோழவளநாட்டின்கண் உள்ள தரங்கம்பாடி யென்ற கடற்கரைப் பட்டினத்திற்கு அருகே யிருக்கின்ற தில்லையாடியென்னு மூரிலே சாலிவாகன சகாப்தம் ௲௬௩௫-ம் ஆண்டிற்குச் சரியான கி. பி. 1712-ம் வருடம் பிறந்தவர். இவர் நல்லதம்பிப் பிள்ளை யென்ற தந்தைக்கும் வள்ளியம்மாள் என்ற தாய்க்கும் புத்திரபாக்கியமாக ஜனித்தவர். இவர்க்கு மூத்த சகோதரர் மூவர் இருந்தனராமாதலாலும், வேறு உடன்பிறந்தார்களில்லையாமாதலாலும் இவர் தம் தாய்தந்தையர்க்குக் கடைப்பிள்ளை யாயினராதலின் அதிக அன்பு பாராட்டி வளர்க்கபட்டுவந்தார். இவர் தக்க பருவத்திலேயே வித்தியாரம்பஞ் செய்விக்கப் பெற்றுக் கல்வி கற்றுத் தமக்கு பன்னிரு ஆண்டு போதாலும் தம் இருமுதுகுரவரையும் இழக்குந் துர்ப்பாக்கியம் சம்பவித்தது. சம்பவித்துமென்? நம் கவிராயர்க்கு அச்சிறுவயதிலேயே செந்தமிழணங்கின்மாட்டுள்ள அன்பானது வாரியென ஆரவாரித்து நம் புலவரை வளைந்துகொண்டது. உடனே நம் புலவர் தம்து நீர்நாடு நீங்கித் தம்மை நீங்காது பின்றொடரும் அன்புவெள்ளங்கடப்பதற்குப் [1]புகலான [2]புணை தேடப் புறப்படுவான் தொடங்கித் தருமபுர ஆதீனத்திற்குச் சென்று ஆண்டு வசித்த தம்பிரான்மாரிடம் ஓரற்புத [3]நாவாய் பெற்றுத் தமது அற்புக்கடலைக் கடக்கப் புகுந்தார். இவரது "குசைநுனியதனினுங் கூரிய மதி"யினைக்கண்ட தம்பிரான்மார் இவர்பால் மிகப் பிரீதியுற்றுக் கைர்வாண திராவிடாந்திர பாஷைகளி லிவரை வல்லுநராக்கினதோடே நின்றுவிடாமல் "சைவசித்தாந்தத் தெய்வ நன்னூலை"யும், அவற்றின்கணுள்ள இரகசியப்பொருள்களையும், ஐயந்திரிபற வோதுவித்தார்கள். இவர் விசேஷமாகத் தமிழிலக்கணங் கற்றதெல்லாம் தருமபுரமடத்தைச் சேர்ந்த அம்பலவாணக்கவிராயரிடத்தென்று சொல்லுப.

2. இவர் வேளாளர்குலத்தைச் சேர்ந்தவர். இவர் சித்தாந்தசைவர் மரபினராயினும் வைணவத்திலு மதிகப் பிரீதியுள்ளவர். மேலு மிவர் தாம் தருமபுர ஆதீனத்திற் கல்வி கற்றபின் அம்மடத் தம்பிரான்மார் இவரைத் துறவியாக்குவான் முயன்றும், நம்புலவர் அவர்கள் கருத்தினுக்கு இசையாராய்த் திரும்பிவிட்டனர். பிறகு இவர் தமக்கு முப்பதாவதுவயதிலே விவாகஞ் செய்துகொண்டு இல்லறம் நன்கு நடத்தற்பொருட்டுக் காசுக்கடை யொன்று ஸ்தாபித்துக்கொண்டும் இராமாயணப் பிரசங்கஞ் செய்துகொண்டும் வந்தனர்.

3. இனி யிதுகிடக்க நங் கவிராயர் தமக்கு 42-வது வயதில் புதுச்சேரிக்கு வியாபார சம்பந்தமாய்ப் புறப்பட்டு ஓரிரவு சீர்காழிமடத்திற்றங்கினதாகவும், ஆங்கு, இவருடைய சகபாடியாகிய சிதம்பரபிள்ளை யென்பார் தாம் பாடுவான் தொடங்கிப் பின் முடிவுபெறாதிருந்த பள்ளென்னும் ஓர்விதப் பிரபந்தத்தை முடிக்கும்படி வேண்டிக்கொண்டதாகவும், அவருடைய வேண்டுகோட்கிணங்கி நம்புலவர் அதனைப் பூர்த்திசெய்து ஒரு வேலையாளிடங் கொடுத்துவிட்டுத் தமது நண்பரிடஞ் சொல்லாது புதுச்சேரிக்குப் போய்விட்டதாகவும், இது கேள்வியுற்ற சிதம்பரம்பிள்ளை யவர்கள், பள்ளினைப்பார்த்து மகிழ்ந்து நம்புலவரைத் தமக்

[1] புகல்=அடைக்கலம். [2] புணை=தெப்பம். [3] நாவாய்=கப்பல்

குச் சமீபத்திலேயே யிருத்திக்கொள்ளும் நோக்கத்தினராய்ப், புதுச்சேரிக்குப் போன நண்பர் வருமுன் ஒரு விடுகட்டி, நமது கவிராயருடைய சமுசாரத்தினை யதன்கண் இருக்கும்படி செய்ததாகவும், புதுச்சேரியினின்றும் போதந்த புலவரை யிட்டுக்கொண்டு அப்புது வீட்டிற்குச் சென்றதாகவும், ஆண்டு நம்புலவர் தம்மனைவி முதலாயினேரைக் கண்ணுற்றுக் களிகூர்ந்து, அவ்விடத்திலேயே தம் பின்னுள் முழுவதுந் தங்கிவிட்டதாகவுஞ் சொல்லுபவாதலின் இவர் சீர்காழி அருணசலக்கவிரயார் என்று அழைக்கப் படுகிறரென்ப,

4. இனி நம்புலவர் சீர்காழியிலிருந்தகாலத்து அநேகப் பிரபந்தங்கள் செய்தனர். மேலே சொல்லிய பள்ளினையொழித்து இவர் செய்த நூல் ஐந்தாகும். அவை சீர்காழிப் புராணம், சீர்காழிக் கோவை, அநுமார்பிள்ளைத் தமிழ், இராமநாடகம், அசோமுகிநாடகம் என்று பெயர் பெறும். இவ்வைந்து பிரபந்தங்களுக்குள்ளே யிவருடைய் இராமநாடகம் ஒன்றே யதிகப் பிராதாநியத்தை யடைந்து பிரகாசிக்கின்றது.

5. இனி யிவருடைய பிரபந்தங்களைப்பற்றிப் பேசப் புகுவாம். முதலாவது இவருடைய சீர்காழிப் புராணமானது ஏறக்குறைய 1500 கவிகளை யுடையது. இப்புராணத்தில் இவர், சீர்காழிக்குத் துவாதசநாமம் ஏற்பட்டதற்குக் காரணபூதமான கதைகளையும், சிவபிரானுலத்தலத்துத் திருவிளையாட் டயர்ந்ததாகக் கூறற்படும் சில இலீலைகளையும் பற்றி நன்கு விவரித்துக் கூறியிருக்கின்றனர். இப்புராணம் வெகு சுகமாக அமையாதபோதினும், அதிகமாகத் தாழ்ந்த தரத்திற் சேர்ந்ததன்று. சிலவிடங்களிற் செவ்வனேயொழுகாது கடினநடையி லமைக்கற்பட் டிருக்கிறது. இவர் இடை யிடையிற் கூறுங் கற்பனைகளெல்லாம் விசேஷமாகச் சாமாநியமானவை யென்பது பெரும்பாலார் கொள்கை.

6. இரண்டாவதாகிய சீர்காழிக்கோவை யெம்கைக்ககப்படவில்லை. சிலர் சீர்காழிக்குப் புராணமொன்றைத் தவிர்த்து இவர் வேறென்றுஞ் செய்யவில்லை யென்று கூறுப. இனி யிவருடைய சுதந்தரயூகத்தையுங் கற்பனு சாமர்த்தியத்தையும் பற்றி யோசிக்குமிடத்துக், கோவைப் பிரபந்தஞ் செய்ய இவர் வல்லுநரல்லரென்று போதருமென்று கூறுவாருமுளர்.

7. அநுமார்பிள்ளைத் தமிழ் என்பது வழக்கம் போலப் பத்துப் பருவங்களுடையதாய்க் காணற்படுகின்றது. இது சற்று நல்லநடையில் எழுதற்பட்டிருக்கின்றது. சிற்சில கவிகள் மாத்திரமே நல்லநடை பெறவில்லை. சில கற்பனைகள் படிப்போர்க் காநந்தந் தரத்தக்கன.

8. மேற்கூறிப் போந்த பிரபந்தங்களி லெல்லாஞ் சிறந்ததாயும், விசேஷமாகப் படிக்கபற்வதாயும் இருக்கின்ற இராமநாடகத்தைப் பற்றி யேகதேசம் பேசப் புகுவாம். இது கம்பராமாயணக் கதையை நாடகமென நாமஞ் சூட்டி விருத்தங்களாவும், கீர்த்தனங்களாவும், சீர்காழிக்குச் சமீபத்திலேயுள்ள சட்டைநாதபுரத்தினின்றும் போந்து சங்கீத வித்துவான்களாய்க் காணற்பட்ட வேங்கடராமையர், கோதண்டராமையர் என்னு மிருவருடைய உதவியைக் கொண்டு இராகதாளங்களுக்கு இசைய நம்புலவராலியற்றற்பட்டது. இதை யிவர் தமக்கு அறுபதாவது வயதிற்ருன் பாடினரென்ப. இஃது தற்காலத்திலே மகா-௱-௱-ஸ்ரீ பெ. சுந்தரம் பிள்ளை யவகள் எம். ஏ. யால் எழுதற்பட்ட நாடகம்போலாது "தொந்திக்கணபதி தோன்றினரே" என்று குதிக்கும் கூத்தமார்க்கத்திற் பட்டதாயினும் பெரும்பான்மையோராற் படிக்கற்படுதல் யாவர்க்குந் தெரிந்தவிஷயம். இப் புத்தகத்தின்கட்படு மிவருடைய சொல் வலிமையும், நயமுங் "கற்போர்நெஞ்சங் காமுறப் படுத்துங்" தகையன வென்பது வெள்ளிடை மலைபோல் விளங்குதலறிக. இது சென்னைப் பட்டினம் மணலி முத்துக்கிருஷ்ண முதலியார் சமுகத்தி லரங்கேற்றற் பட்டதென்ப. இதற்கு ஆதாரமாகச்,

"சித்திதரு கிறவல்லி புத்திதரு கிறவல்லி
தேவர்கள் வணங்குவல்லி
தில்லைநாயகவல்லி சிவகாம வல்லியிரு
திருவிழிக் கருணையாலே
சத்யவா சகனென்று பூமண்டலாதிபர்க
டாமெங்கனுந் துதிக்குஞ்
சகலபா ஷாநிபுண மணலிமுத் துக்ருஷ்ண
சதுரநீ வாழிகண்டாய்

நத்துமலர் குவளைநான்மதியநீ செஞ்சாலி
நான்கருவி மழைமேகநீ
நளினநான் பதிரிநீ பிள்ளைநா னன்னைநீ
நான்கவிஞன் வழுதிநீ காண்
சுத்தமுள ராமாய ணந்தனைக் கொண்டுனது
சமுகமது பெறவருகிறேன் [ட்கவே
சொற்பொரு ளறிந்தளவு சொல்லுவேன் கே
துணையாக வேண்டு நீயே''

என்ற சீட்டுக்கவியினையும், அரங்கேற்றத்திற்குப்பின் நம்புலவர்பாடிய

“கனந்தந்தான் கனகாபிஷேகந் தந்தான்
களங்கமிலாக் கருப்பொருளை யழைத்துத்தந்தான்
மணந்தந்தான் முடிசூட்டு மாலைதந்தான்
வாணிசிங்கா தனத்திருத்தி வரிசைதந்தா
னினந்தந்தா னிராமகதை யெவர்க்குந்தந்தா
னெனைராமா யணக்கவிரு னெனப்பேர்தந்தா
னனந்தந்தான் மணவிமுத்துக் ருஷ்ணபூப
னகந்தந்தா னிருமையிலுஞ் சுகந்தந்தானே.”

என்ற கவியினையுங்கொள்க. இதற்குமுன் இது ஒரு முறை ஸ்ரீ ரங்கநாதர் சந்நிதியில் வாசித்தரங்கேற்றப்பட்டதென்ப.

9. இனி அசோமுகிநாடகமானது விசேஷமாகப் படிக்கற்படாமையானும், இராமநாடகம் போல் அதன்கண் அவ்வளவு சிறப்பின்மையானும் பிறவாற்றானும் விடுத்து மேற்சொல்வாம்.

10. இத்தகைய நங்கவிராயர் தம்மிறுதிக் காலத்துச் சைவ சந்நியாசம்பூண்டு சின்னாள் திரிந்தனர். இவர் கி. பி. 1779-ம் ஆண்டு தமக்கு 67-வது வயதிலே சீர்காழித் தலத்திலே சிவலோகப்பிராப்தியாயினர். இவர்க்கு மூன்று புத்திரர்களிருந்தனராம். இவர் சாமாநிய ஜனர்களான் மிகுதியுங் கொண்டாடற் படுகின்றார்.

வி. கோ. சூரியநாராயணசாஸ்திரி, பி. ஏ.

---

## ஹிந்துக்களின் க்ஷயகதி.

### 6-வது புத்திக்ஷயம்.

ஹிந்துக்களாகிய நாம் புத்திக்ஷயம் அடைந்திருக்கிறோ மென்பதில் சமுசயமில்லை. ஞானம் என்னும் பர்வதத்தின் கொடுமுடியில் ஒருகாலத்தில் வீற்றிருந்த நாம் இப்போது அதின் அடியில் கண்கெட்ட குருடர்போல் தடவித் தத்தளிக்கின்றோம். நாம் சகலவித மேம்பாடடைந்து புத்தியபிவிருத்தி பெற்றிருந்த காலத்தில் கேவலம் மிருகப் பிராயமாயிருந்த ஜனங்கள் இப்போது நம்மிலும் எத்தனையோ மடங்கு அபிவிருத்தி யடைந்து மேலான ஸ்திதிக்கு வந்திருக்கிறார்கள். க்ஷயகதியிலுள்ள நம்முடைய தற்கால புத்தி சக்தியைக் கண்டு இதுபோற் முன் நாம் எப்போது மிருந்தோமென்றும், நமக்கு அதிகபுத்தியுள்ளதாய் ஒருகாலத்தில் வதந்தியுள்ளது நிராதாரமாயுள்ளதென்றும் அன்னியதேசத்தவர்களிற் சிலர் கண்டித்தெழுதியிருக்கிறார்கள். இவ்வகைக் கண்டனைக்கு வரம்பில்லையென்றாலும் நம்முடைய க்ஷயகதியை நாட்டும்மட்டில் நாம் அதை ஆக்ஷேபிப்பதற்கு இடங்காணோம்.

நாம் புத்திக்ஷய மடைவதற்குக் காரணம் அநேகம். நமது பெரியோர்கள் எழுதிவைத்த சாஸ்திரச் சித்தாந்தங்களை ஆக்ஷேபிக்கக்கூடாதென்றும் அவைகளை நிராக்ஷேபமான சித்தாந்தங்களாய்க் கைப்பற்ற வேண்டுமென்றும் நமக்குள் ஒரு அபிப்பிராயம் ஜனித்திருக்கிறது. அந்த அபிப்பிராயத்தால் சிந்தா சக்தி குறைந்து புத்தி க்ஷயப்படுவதற்கும் காரணம் உண்டாயிற்று. வேதம், வேதாகமம், ஸ்மிருதி, புராணம், இதிஹாஸம் என்ற இவைகள் நமக்கு பிரமாணமாயுள்ளன தான். இவைகளில் கூறியிருக்கும் சாஸ்திர சித்தாந்தங்களைத் தர்க்கித்துப் பரிசோதிப்பதால் அவைகளின் யதார்த்த ஸ்திதிமாறிவிடுமோ? விடாது. தங்கத்தை எத்தனைவிதம் புடம்போட்டாலும் அதின் நிறமாவது, குணமாவதும்மாறுமா? மாறாது: அதுபோல, மேற்கண்ட பிரமாண கிரந்தங்களிலடங்கியிருக்கும் சித்தாந்தங்களை எவ்வகைப் பரிசோதனை செய்தாலும் அவைகள் உண்மையாயிருக்கும் பக்ஷத்தில் அவைகட்கு ஒரு அபாயமும் உண்டாகாது. வியாகரணம், தர்க்கம், கணிதம், சோதிடம், வைத்தியம், பல வகை கலைகள் இவைகளிலடங்கிய சித்தாந்தங்களும் இவ்வாறே பரிசோதனைக்குட்படுவதில் யாதொரு நஷ்டமும் சம்பவியாது. பலமான பரிசோதனைக்கு நடுங்கும் சாஸ்திரங்கள் சாஸ்திரங்களன்று. இவ்வகை சாஸ்திரங்கள் நிலைப்படாவாம்; விருத்தியடையாவாம். இதுவனா யெ

மூதி யிருக்கும் கிரந்தங்களில் காணப்படுவது, முடிபான கோட்பாடென்று வந்திருப்பதால், மேற்சிந்தைக்கு இடமில்லாமல் புத்திமழுங்கி க்ஷயமடைந்தது. ஓட்டமில்லாத ஜலம் பாசி பற்றி நாறுவதுபோல சிந்தையற்ற சந்ததிகளும் புத்திக்ஷயமடைந்து நாறிப்போக வேண்டும். நெடியகாலமாய் நாம் சிந்தையற்று நம்முடைய புத்திக்கும் போக்கில்லாமல் தேங்கிநின்று விட்டபடியால் நமக்கு புத்திக்ஷயம் உண்டாயிற்று. பிரபஞ்சத்தில் சலனமில்லாத நிலை அசாத்தியம். ஒன்று மேற்கதி யடையவேண்டும். இல்லாவிட்டால் அதோகதி யடைய வேண்டும். இரண்டிற்கும் மத்தியில் ஓர்வித நிலையும் சாச்வத மன்று. நாம் மேனோக்கிய சலன மில்லாமல் உள்ளதைக்கொண்டு பரிமளித்து நிலைபெறலாமென்று சோம்பி யிருந்தபடியால் நம்மை க்ஷயகதி பிடித்துக்கொண்டது.

நமது தேசத்தில் வெகுகாலமாய் புஸ்தகம் அச்சடிக்கும் தந்திரம் தெரியாமல் இருந்தது. ஆகையால் வாய்மூலம் சாஸ்திரங்கள் கிரகிக்கவும் கைகொண்டு எழுதி வைக்கவும் நிர்ப்பந்தமுண்டாயிற்று. பெரிய சாஸ்திரங்கள் கைகொண்டெழுதி வியாபகம் பெறுவது வெகு கடினம். ஏடுகளில் எழுதவேண்டிய சிரமத்தை உத்தேசித்து அநேகர் எழுதிப் படிக்க சோம்புவார்கள். இவ்வகை சிரமத்தை உத்தேசித்து நூதனமாய் கிரந்த மெழுதப்பட்டவர்களும் விஸ்தாரமாய் எழுத முயலார்கள். முடிபான சித்தாந்தங்களை மாத்திரம் எழுதுவார்களே யன்றி அவைகளைப்பற்றிய சகல ஆக்ஷேப சமாதானங்களைச் சொல்வதற்கும் முடிபான சித்தாந்தங்களின் ஆதாரங்களான காரணங்களை வரன் முறையாய் எடுத்துக்காட்டவும் இடமுண்டாகாது. அவைகளை வாசிப்பவர்கட்கு பக்திவழிகாட்டி யாவதே யன்றி புத்தியால் தெளிவுண்டாகி அவைகளைக் கைப்பற்றும் சுபாவபிரமாணம் உண்டாகாது. நமது தேசத்தில் சூத்திரங்கள் உண்டா யிருப்பது போல் எந்த இராச்சியத்திலும் உண்டாயிருப்பதில்லை. எவ்வளவு கடினமான கணிதக்கிரியைகளும் 'கீர்ணஸ்ரேயஃ'முதலிய கணிதவாக்கியங்களில் அடக்கிவிட்டார்கள். க்ஷேத்திர விவகாரம் அங்க கணிதம் பீஜகணிதம் திரிகோண மிதி முதலிய கணித சாஸ்திரங்களிற் கொஞ்சங்கூட ஞானமில்லாமல் கோளங்களின் சுபாவம் சற்றுந்தெரியாம லிருந்தாலும் விநாடி விடாமல் கணிக்க வேண்டிய வாக்கிய முறைகளை நம்முடைய முன்னோர்கள் ஏற்படுத்தி விட்டபடியால் க்ஷேத்திர விவகார முதலிய கணித சாஸ்திரங்களின் மேல் நாட்டமின்றி அவைகள் மலினதிசைக்கு வந்து விட்டன. அவ்வகை சாஸ்திரங்களை மூலகாரணத்தோடு கற்றறியாத நாம் அவைகளை எவ்வாறு ஞாபகத்தில் வசிக்கவும் விருத்திப் படுத்தவும் கூடும்? பாஸ்கராச்சாரியார் சூரியசித்தாந்தமும் கோளாத்தியாயமும் லீலாவதியும் எழுதி வைக்காவிட்டால் நமக்குள் க்ஷேத்திரவிவகாரம், அங்க கணிதம், பீஜகணிதம், திரிகோணமிதி முதலிய சாஸ்திரங்கள் இருந்தனவோ என்று சந்தேகிக்கக்கூட இடம்வந்திருக்கும். வாக்கிய கணிதத்தின்மேல் மாத்திரம் நாட்டம்நின்று விட்டபடியால் அல்லவா வராஹ மிஹிரர் எழுதிவைத்த பஞ்ச சித்தாந்திகம் இப்பொழுது நஷ்டமாய்ப் போய்விட்டது? வராஹ மிஹிரர், பாஸ்கராச்சாரியார் இவர்கள் எந்த மட்டில் நமது கணித சாஸ்திரங்களை விட்டிருக்கிறார்களோ, அந்த மட்டில் தான் இப்பொழுது இருக்கின்றன. அவைகளின் ஸ்வரூபஞானம் நமக்கில்லாதபடியால், அம்மட்டிற்குத் தாழ்ந்தே க்ஷயப்பட்டிருக்கிறோமென்று சொல்லவேண்டும்.

காரண காரிய சம்பந்தம் நன்றாய் வெளியிடாத சாஸ்திரங்கள் நிலைநிற்காவாம். இதை யுத்தேசித்துத் தான் எதார்த்தங் கண்டு பிடிக்கும் வழிகள் முக்கியமேயன்றி அவ்வழிகள் மூலம் கண்டு பிடித்த எதார்த்தங்கள் முக்கியமில்லையென்று சில ஐரோப்பிய வேதாந்திகள் கூறியிருக்கின்றார்கள். 'கீர்ணஸ்ரேயஃ'முதலிய கணிதவாக்கியங்கள் நமது முன்னோர்களின் பெருமையைக் காண்பிக்கக் கூடியனவா யிருந்தாலும் அவைகளின் மூலம் நமக்குள் கணிதசாஸ்திரம் மலினமடைந்து அவைகளின் வழியூர்த்தியாய் மறந்துபோகும்படிநேரிட்டிருப்பதால் அக்காரிய நிமித்தம் நமது முன்னோர்களைக் குற்றப்படுத்திப் பேசக்கூட மனம் வருகிறது.

சாஸ்திரங்களின் ஸ்வரூபஞானமும் அவைகளிலடங்கிய விஷயங்களின் காரணகாரிய சம்பந்தமும் ரகசிய வழிகளும் அறிந்த சிலர் அவைகளைப் பிறர்க்குச்சொல்லிக்கொடுத்தால் தமக்கும் தாம் அறிந்திருக்கும் சாஸ்திரங்கட்கும் மகத்துவம் குறைந்துவிடுமென்று அவிவேகமாய் நினைத்து யாவர்க்கும் சொல்லிக்கொடுக்காமல், தம்மோடு தாம் கிரஹித்த சாஸ்திர ரகஸியங்களும் மாண்டுபோகும்படி செய்திருக்கிறார்கள். இவ்வாறு பாரம்பரியமாய் வந்த ரஹஸியங்களெல்லாம் பிறர்க்குச் சொல்லிக்கொடுக்க மனமின்றியும் கிரகிக்கத்தக்க பாத்திரம் இன்றியும் மஹினதிசைக்கு வந்து விட்டன. முன்னோர்கள் ஆராய்ச்சி செய்துவந்த பான்மையாக நாம் இப்போது ஆராய்ச்சி செய்கிறதுமில்லை. அல்லாமலும் முற்காலங்களில் செய்திருந்த ஆராய்ச்சிகளின்பலனைக்கிரகித்து மேல் ஆராய்ச்சி செய்வது எளிதே யல்லாமல் அவைகளை உபேக்ஷித்து எல்லாவற்றையும் ஒரு சந்ததியில் கண்டு பிடிப்பது அசாத்தியம். நமக்கு ஆதாரமாய் உண்டாயிருந்த பூர்வசாஸ்திரரகஸியங்களும் அவைகளைக்கிரகிக்க வேண்டிய சாமர்த்தியமும் க்ஷமையும், அவைகளை விருத்தியாக்கவேண்டிய மேனேக்கமும் சிரமமும், அவைகளின் மூலம் கண்டுபிடித்த நூதனசங்கதிகளை எழுதிவைத்துஅவைகளைப்பிறர்க்குப் போதிப்பிக்கவேண்டிய உத்ஸாகமும் மனமும் இல்லாமல் ஆராய்ச்சி செய்யவேண்டிய வாசனையும் இழந்து கேவலம் பசுக்கள் போல் காலந்தள்ளும்படியான வாசனை நமக்கு வந்தபடியால் நமக்கு புத்திக்ஷயம் உண்டாக காரணம் பவித்தது.

அச்சில்லாமல் புஸ்தகம் பெருகுவது கடினம் என்று முன்னமே சொன்னோம். புஸ்தகம் எழுதும் சிரமத்தை உத்தேசித்து இரவலாக புஸ்தகம் வாங்கிக்கொண்டு போனவர்கட்கு அதைத் திரும்பிக்கொடுக்க மனமில்லாமல் பலவகைச் சாக்குப்போக்குச் சொல்லித் தக்க வைக்கவேண்டிய அசத்தியபுத்தி அதனாலேற்பட்டது. இதை உத்தேசித்துத் தான் நீதி ஸ்லோகங்களில் பின்வரும் ஸ்லோகம் எழுதப் பட்டிருக்கிறது.

புஸ்தகம் வனிதாவித்தம் பரஹஸ்தம் கதம் கதம்
அதவா ஹஸ்தலப்தஞ்சஜீர்ணம் நஷ்டஞ்ச கண்டஸ:

அதாவது புஸ்தகமும் ஸ்திரீயும் திரவியமும் பிறர்கையில் அகப்பட்டால் போனது தான் என்றும் ஒருவேளை திரும்பிக் கிடைத்தாலும் அது ஜீரணமாயும் நஷ்டமாயும் மேல் உபயோகத்திற்கு உதவாதபடிக்கும் திரும்பிவருமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இதை உத்தேசித்து அநேகர் தங்கள் கைவசமுள்ள புஸ்தகங்களைப் பிறர்க்கு கொடுக்க மனமில்லாமல் தாங்களும் உபயோகிக்காமல் எப்போவாவது தங்கள் குடும்பத்தில் அவைகளை உபயோகிக்கக்கூடிய புத்திமான் ஜனிக்கமாட்டானா என்ற அபிமானத்தின் மேல் மாத்திரம் ஏடுகளை அசைகளிலும் மாளைகளிலும் கட்டியிட்டு ஏடுகள் ஒன்றோடொன்று பற்றிப் பிடித்து எழுத்துகள் திரபித்துப் போகும்படிக்கும் அவ்வாறு புஸ்தகங்கள் நஷ்டப்பட்டுப் போகும்படிக்கும் செய்திருக்கிறார்கள். மழை காலங்களில் சாஸ்திர ஏட்டுகளின் மகத்துவம் தெரியாத சிலஸ்திரீகள் தற்கால ஆவசியகத்தை மாத்திரம் பாராட்டிஏடுகளைத் தீமூட்டுவதற்குஉபயோகப்படுத்தியிருக்கிறார்கள். அநேகசாஸ்திரங்களைச்சிதல் தின்று விட்டன. சாஸ்திராப்பியாசமும் ஆராய்ச்சியும் வாசனையும் அபிமானமும் இல்லாவிட்டால் புத்திக்ஷயப் படுமென்பதற்குச் சந்தேக முண்டா?

சுபாவோக்தி அலங்காரமாய் நம்முடைய கவிகள் கிரந்தங்கள் எழுதிவந்த காலங்களில் சாஸ்திர ஆராய்ச்சி குறையவில்லை. அதிசயோக்தி அலங்காரம் பெரிதாக எண்ணி கவிகள் எழுதத் தொடங்கினது முதல் வாஸ்தவ நிலையிலுள்ள விஷயங்களில் கவனமற்று கேவலம் அதிசயமாய்ச் சொல்ல வேண்டுமென்ற ஆக்கிரகத்தின்மேல் கற்பனா சக்தியை வெகுதூரம் விட்டுவிட்டு எவ்வளவு வாஸ்தவக் குறைவும் பிழைநோக்கும் இருந்தாலும் அதினின்றும் பின் வாங்காமல் மொட்டைத் தலைக்கும் முழங்காலிற்கும் முடிச்சிட்ட வண்ணம் கேவலம் சப்த சம்பந்தத்தால் முடிச்சிட்டு வந்தபடியால் ஆராய்ச்சி குறைந்து அபத்தங்களெல்லாம் சுபத்தங்களாக நினைக்கும் அவிவேகமும் அதின் மூலம் புத்திக்ஷயமும் உண்டாகிவிட்டது. அதிசயோக்தி அலங்காரங்களாலும்

சிங்கார ஸ்லோகங்களாலும் மனம் கவரப்பட்ட சந்ததிகள் கூர்நோக்கும் சூக்ஷ்ம கிராஹியமும் தெளிவான சிந்தையும் தீக்ஷணமான புத்தியும் அருமையான க்ஷமையும் வரும்படி யில்லாத உழைப்பும் வேண்டிய பிரகிருதி சாஸ்திரமுதலிய சாஸ்திரங்களில் கவனமற்று சுபுத்தி நீங்கி தப்பிதபுத்தி பிடிபட்டு அதின்மூலம் சகல புத்தியும் க்ஷயிக்கும்படி காரண முண்டாயிற்று. வாக்குப் பிரமாணமே பிரமாணமாகக் கைக்கொண்ட நாம் வெளியிற் றேடியலைந்து கண்கொண்டு பார்த்தும் காதுகொண்டு கேட்டும் மற்ற இந்திரியங்கள் கொண்டு அறியவும் கூடியவிஷயங்களையும் அவைகள் மூலம் ஏற்படக்கூடிய ஊகங்களையும் விட்டுவிட்டு சப்தரூபமாககிரகிக்கக்கூடிய வியாகரணம்,தர்க்கம், வேதாந்தம், மீமாம்சம் முதலிய சாஸ்திரங்களை மாத்திரம் புஸ்தகங்களில சொல்லி யிருக்கும் மாதிரியில் குருட்டுக்கோழி தவிடு விழுங்கும் பான்மை யாகவும், சிறுபிள்ளைகள் சிலுசிலுப்பை குலுக்கும் பான்மையாகவும் படிததும் வழங்கியும் வந்தபடியால், படித்தவைகள், தன்புத்தியால் ஜீரணப்படுத்தி தன்னோடு லய மடையாமல் ஒரு மூலையில் குப்பை குவிந்திருக்கும் தன்மையாய் ஒருங்கு சேர்ந்திருந்த தன்றி புத்தி விசாலத்திற்கோ அபிவிருத்திக்கோ இடமில்லாமல் க்ஷயகதி உண்டாயிற்று.

ஆரியர்களாகிய நாம் இந்ததேசத்தில் பரவிப் பெருகிவந்த காலங்களில் நம்முடைய மத சிரேஷ்டத்தையும் சாஸ்திர சிரேஷ்டத்தையும் இந்நாட்டு வாசிகளாகிய பூர்வகுடிகட்கு போதிப்பிக்கும் பொருட்டும் அந்நியமத கண்டனையின் பொருட்டும் சிந்தா சக்தியும் ஆராய்ச்சியும் விருத்தியாகி வந்தது. பிற்பாடு நம்முடைய மத சித்தாந்தங்களும், சாஸ்திர சித்தாந்தங்களும் பெரிதென்றும் பிரமாணமென்றும் பொது சம்மதமும் மதிப்பும் வந்தபிற்பாடு சிந்தா சக்தியும் ஆராய்ச்சியும் குன்றி உள்ளதே போதுமென அடக்கம்வந்து அப்பியாசக் குறையால் புத்திக்கு பலக்குறைவும் க்ஷயகதியும் ஏற்பட்டன. இடைக்காலங்களில் நம்முடைய சுதந்தரம் இருக்கும்போது நூதனமதங்கள் உண்டானதால் அவைகளைக் கண்டிக்க வேண்டிய பிரயத்தனத்தோடு கொஞ்சம் புத்தி அபிவிருத்தியுண்டாயிற்று. பௌத்தமத மில்லாவிட்டால் ஸ்ரீமத் சங்கராச்சாரியாருடைய அவதாரம் வெளிக்கு வந்திருக்கமாட்டாது. பிற்பாடு மகமதியருடைய படையெடுப்புத் தொடங்கின பின்பு நம்முடைய ஜனங்கட்கு கொஞ்சம் கஷ்டதிசை நேரிட்டது. யுக்தியினால் வெல்லும் வழிவிட்டு சக்தியினால் வெல்லும் வழியை மகமதியர் அனுசரித்து வந்ததாலும், மேது திரவியங்களையெல்லாம் கொள்ளையிட்டு வந்ததாலும் பக்குவம் செய்து வைத்திருந்த ஆகாரமுதல் நமக்கு சித்திக்குமென்ற நம்பிக்கையில்லாததினாலும் காலக்ஷேப சங்கடமும் புத்திக்குக் கவலையும் உண்டாயிற்று. அக்காலங்களில் தபோசக்தியாலும் ஈசுவர கடாக்ஷத்தாலும் ஆங்காங்கு அற்புதங்கள் காண்பித்து நம்முடைய முன்னோர்கள் நம்முடைய மதத்தைக்காப்பாற்றிக் கொண்டார்கள். அக்காலங்களில் சாஸ்திர அபிவிருத்திக் கிடமில்லாமல் ஸ்வயரக்ஷை மாத்திரம் நாடப்பட்டு தத்தளித்துவந்தார்கள். இதனாலும் புத்திக்ஷய மடைந்தது. தற்காலத்தில் மகமதியருடைய அக்கிரமத்திற் கிடமில்லாமல் கிருஸ்துவமத துரைத்தனத்தார் ஏற்பட்டிருக்கிறார்கள். இவர்கட்கு யுக்திவாதமும் அநுபோகமும் சத்திய அபிமானமும் பிரமாணம். வெகுஆராய்ச்சியுள்ளவர்கள். இவர்களுடைய யுக்திவாதங்களாலும், ஆராய்ச்சிகளாலும் நமது மதங்களின் எதார்த்த ஸ்திதி அறியவேண்டு மென்ற ஆக்கிரஹத்தினாலும், இவர்கள் ஏற்படுத்தி யிருக்கும் கல்விச்சாலைகளாலும் சிந்தாசக்தியும் ஆராய்ச்சியும் நூதனமாய் தூண்டப்பட்டு நம்மை க்ஷேமப்படுத்தி வருகிறது. இக்காலங்களில் பிரம்மஸ்ரீ வெங்கிடகிரி சாஸ்திரி போன்ற ஹிந்து சாஸ்திரிகளும் சிந்தைசெய்து வெளியிற் புறப்பட்டு பிரசங்கம் தொடங்குகிறார்கள். கிறிஸ்தவமதமில்லா விட்டால் மலையாளத்தில் ஆரிய சித்தாந்த சந்திரிகை யென்ற மாதாந்தப் பத்திரிகையும் சிதம்பரத்தில் பிரம்மவித்தியா என்ற கீர்வாண பத்திரிகையும் சென்னையில் ஹிந்துமத டிராக்ட்டு சபையும் உண்டாயிருக்கா.

அந்நிய ஜாதிக்காரருடைய சந்திப்புண்டாவதால் சகலவிதமான க்ஷயங்களும் உண்டாகும்.

இதைப்பற்றி டார்வின் என்ற இங்கிலீஷ் சாஸ்திரி எழுதியிருப்பதை நான் எழுதியிருக்கும் ஆபரணபைத்தியத்தைப் பற்றிய புஸ்தகத்தில் தர்ஜிமாசெய்து எழுதியிருக்கும் பாகத்தை இங்கே எடுத்துக் காட்டுவது உசிதமென்று நினைக்கிறேன்.

"வெகுநாட் பிரிந்து பிரத்யேகப் பட்டிருப்பதும் இயற்கையில் பிரத்தியேகப்பட்டிருப்பதுமான இரண்டு மானுடராசிகள் முதல்தடவை சந்திக்கும்போது வியாதி உண்டாகிறது. இதற்குக் காரணம் வெளியாகாமல் ரகசியமா யிருக்கிறது. வான்கூவர் த்வீபில் (தீவில்) மனுஷராசிகள் நாசமாய்ப் போவதைப் பற்றி வெகு சூக்ஷ்மமாய் கவனித்த ஸ்ப்ரோட் டென்பவர் அப்படி நாசம் நேரிடுவதற்குக் காரணமாய்ச் சொல்வதென்ன வென்றால்: ஐரோப்பியர்கள் வந்ததின் மேல் சுதேசிகட்குள் வழக்க பேதங்கள் ஏற்பட்டு அதனால் பிணிகள் வெகுவாய் ஜனிக்கிறதென்பது தான். பார்வைக்கு எவ்வளவோ அற்பமாய்க்காணப்படுகிற பின் சங்கதியின்மேலும் அவர் வலிவைத்துப் பேசுகிறார். அதாவது ஐரோப்பியர்களுடைய வழக்கங்களைக்கண்டவுடன் அவைகள் சுதேசிகட்குப் புதிதாய் இருத்தல் நிமித்தம் மனசு குழம்பி மக்குப்பிடித்துப் போகிறார்கள். முயற்சிக்கு வேண்டிய உத்ஸாகங்களெல்லாம் இழந்து புதிதாகத்தூண்டுதல் இல்லாமல் தீர்க்கிறார்கள்......... அநேக திருஷ்டாந்தங்களில் மனுஷவர்க்கம் நாசமடைவதற்கு வெகுபலமான காரணம் அந்நிய ஜாதிக்காரர் மூலம் ஏற்படும் புதுஸ்திதிகள் தன்மாத்திரையில் கெடுதல் இல்லாவிட்டாலும் அவைகள் நிமித்தம் பழயவழக்கம் மாறுகிறது. அம்மாறுபாட்டால் வருவது முக்கியமாய் குழந்தைகட்குள்வரும் அசௌக்கியமும் உத்பத்தி சக்திக்குறைவுந்தான்."

மேற்கண்ட ஐரோப்பிய சித்தாந்தத்தால் வெள்ளைக்காரர் வழக்கம் தன்சுபாவத்தில் எவ்வளவு நன்றாயிருந்தாலும் அவ் வழக்கத்துக்காக இந்துக்கள் தங்கள் பூர்வ வழக்கத்தைக் கைவிடும்போது அவர்கட்குப் பிணியும் மந்த புத்தியும் முயற்சிக் குறைவும் திகைப்பும், உற்பத்தி சக்தி குறைந்து மலட்டு சுபாவம் கூடுதலும் உண்டாகுமென்று வெளியாகிறது, இதற்கு அநுகூலமாகவே நமக்குள் வரவர குழந்தைகள் வியாதிப்பட்டு துர்ப்பலமாகி அகால மிருத்யுவுக்கு இரையாகிறார்கள். பிறிவினையாலும் இயற்கையாலும் பிரத்யேகப் பட்டிருக்கும்மநுஷராசிகளின் சந்திப்புண்டாகும்போது அவர்கள் விடும் சுவாசமே ஒருவரது ஒருவர்க்குவிஷமாய்த்தீருமென்று வேறொரு வெள்ளைக்கார சாஸ்திரியெழுதி யிருக்கிறார். இக்காரணத்தாலும் நமக்குள் க்ஷயகதி ஏற்பட்டிருக்கிறது. ஆனால் சென்ற 200 வருஷமாக சம்பந்தம் ஏற்பட்டபடியால் இனிமேல் அபிவிருத்திக்கு வருவதற்குத் தடையில்லை.

பாலிய விவாகத்தாலும், ஆகாரக் குறைவாலும், வறுமையாலும், வேகடைசுபாவத்தாலும், குணபேதத்தாலும், கலப்பு சம்மந்தத்தாலும், அதி சையோகத்தாலும் கள், சாராயம், அபின் கஞ்சாமுதலிய லாஹிரி பதார்த்தங்களாலும் மத சம்மந்தமான சுத்த பக்திவிட்டு மூட பக்தியாலும், நிந்தை சுபாவத்தாலும் அலட்சிய சித்த விருத்தியாலும் குருட்டுப் பிடிவாதத்தாலும் புத்திக்ஷயம் உண்டாகிறது. பாலிய விவாகத்தால் அதி சீக்கிரம் வீரியவிரயமாய புத்திக்கிருப்பிடமாகிய மூளை வளர்ச்சியின்றி வரண்டு பெரிய சாஸ்திரங்கள் படிக்கவும் சிந்தை செய்யவும் சக்தியில்லாமல், சம்சார துக்கத்தால் ஆராய்ச்சியில் பற்றற்று க்ஷயகதி விஸ்தாரமாய் உண்டாகி வருகிறது. முற்காலத்தில் 30-வயசுக்கு மேல் விவாகம்செய்து வந்தபடியால் சாஸ்திரப்படிப்பிற்கும் அபிவிருத்திக்கும் சாவகாச முண்டாயிற்று. ஆகாரக் குறைவாய் தேகத்தில் ஊர்ஜிதம் குறையும் போது நீர்வளம் நிலவளம் இல்லாவித்துப்போல் வரண்டு போய் வளர்கிறதில்லை. அவ்வளர்ச்சிக் குறைவு சந்ததிதோறும் நீடிக்கும்போது க்ஷயகதி அதிகப்படும். ஹிந்துக்கட்கு ஆகாரபுஷ்டி யில்லையென்பதற்கு ரூபகாரமும் வேண்டுமோ? வறுமையில் சதாதுக்கத்தில் அசப்பட்டு செக்கிலகப்பட்ட எள்ளைப்போல் நசுங்கும்போது புத்தி அபிவிருத்திக்கு இடமேது? வேகடை சுபாவம் பிடிபடுவது ஆலோசனைக் குறைவாற்றான். ஆலோசனை குறையும்போது புத்திக்கும் க்ஷய

முண்டாகும். குணபேதமும் விசாரக் குறைவால் ஏற்படுவதுதான். கலப்பு சம்பந்தத்தால் புத்திக்ஷயம் உண்டாகிறதைப் பற்றி அதிகம் வியாக்கியானிக்க வேண்டிய ஆவசியகமில்லை வறுமையால் புத்தி அபிவிருத்திக்குத் தடை நேரிட்டாலும், ஆகாரத்திற்குக் கவலை யில்லை யென்று வரும்போது புத்தி க்ஷயப்படக்கூடும். இம்மலையாளத்திலுள்ள நம்பூரிபிராமணர்களைப் பார்த்தால் இவ்வபிப்பிராயம் நன்றாய் விளங்கும். இவர்கட்கு எக்காலத்திலும் ஆகாரத்தைப்பற்றிய கவலை யில்லாதபடியால் 16 - வயசானவுடன் புகையிலை முறுக்கி சூத்திர ஸ்திரீகளுடைய சம்பந்தத்தில் ஜோராயெல்லாம் இழந்து சாஸ்திரத்தில்சற்றும்நாட்டமின்றி காரியங்களில் ஞான சூநியராய்த் தீர்ந்திருக்கிறார்கள். கலப்பு சம்பந்தத்தால் தாழ்ந்த ஜாதிக்கு புத்திசக்தி அதிகரிக்கலாம். ஆனால் மேல்ஜாதிகாரர்க்கு க்ஷயமுண்டாகும். சோர சம்பந்தத்தால் சில சமயங்களில் புத்திகூடிய சந்ததியுண்டாகலாம். இதற்குக்காரணம் உளம்பூரித்து மனங்கலந்து உத்சாகத்தோடு உண்டாகு சம்பந்தந்தான். கலப்புசம்பந்தத்தால் உண்டாகும் சந்திகள் பெரும்பாலும் புத்திக்ஷயமடைந்தே யிருக்கிறார்கள், வெள்ளைக்காரர்க்கும் ஆபிரிக்கா தேசத்தில் காப்பிரிகட்கும், ஹிந்துதேசத்தில் ஹிந்துக்கட்கும், அமேரிக்காவில் 'ரெட் இந்தியர்'க்கும் ஜெனிக்கப்பட்ட கலப்புசந்ததியாகிய சட்டைக்காரர் பெரும்பாலும் க்ஷயப்பட்டவர்களேயன்றி முன்னுக்கு வந்திருப்பதில்லை யென்று ஹெர்பெர்ட் ஸ்பென்ஸர் என்பவர் அபிப்பிராயப்பட்டிருக்கிறார்.

குதிரைக்கும் கழுதைக்கும் பிறந்த கோவேறுகழுதையும் அபிவிருத்தியடைகிறதில்லை. அதிசையோகத்தால் புத்திக்ஷய முண்டாவது பெரும்பாலும் அச் சையோகத்தா லுண்டாகும் சந்ததிகட்குத்தான். அதிசையோகம் செய்பவர்கள் சற்று நீடித்த பிரமசரியத்தால் இழந்த புத்தி சக்தியையும் ஞாபக சக்தியையும் திரும்ப அடையலாம். ஆனால் அதிர்ச்சையால் விடவுகொண்ட சுவர்மீது எவ்வளவு சுண்ணம்பு பூசினாலும் பூர்ணமாய் ஒட்டப்படாமல் பலக்குறைவா யிருக்கும் பான்மையாய் அதிசையோகத்தால் தளர்ச்சிகொண்ட புத்தியும் பூர்ணமாய் சௌக்கியத்திற்கு வருகிறதில்லை. சாராயம், கஞ்சா அபின் முதலிய லாகிரிபதார்த்தங்களால் சரீர பலக்ஷயம் புத்திக்ஷயம், ஆயுள் க்ஷயம் வருகிறதென்று இங்கிலீஷ் பார்லிமெண்டு சபையாரே ஒப்புக்கொண் டிருக்கிறார்கள். லாகிரி பதார்த்தங்களால் வரும் தீங்கை உத்தேசித்துத் தான் அதை மகா பாதகங்களில் ஒன்றாய் வகுத்து நமது முன்னோர்கள் விலக்கினார்கள். தற்கால கலால் ஏற்பட்டால் கட்குடி அதிகரிக்கிறது. இவ்வகை தோஷத்திற்கு அங்கிலேய கவர்ன்மெண்டார் தான் உத்தரவாதி. மூடபக்தியால் பொய் மெய் பகுத்தறியும் சக்தி குறைந்து புத்திக்ஷய முண்டாகிறது. நம்முடைய முன்னோர்க்குள்ளாவது அந்நியஜாதிக்காரர்க்குள்ளாவது என்ன இருக்கப் போகிறதென்று உபேக்ஷித் திருப்பதாலும் புத்திக்ஷய முண்டாகக்கூடும்.

ஸ்திரீகட்குக் கல்விப்பயிற்சி யில்லாமையாலும் நமக்கு புத்திக்ஷயம் ஏற்பட்டிருக்கிறது. க்ஷேத்திர வளமில்லாவிட்டால் என்னபலனுண்டாகும்?

அவிவேகமான கலியாணங்களாலும் புத்திக்ஷயமுண்டாகிறது. கேவலம் முட்டாள்கள், சித்த பிரமையுள்ளவர்கள் மக்குப் பிடித்தவர்கள், தெளிவில்லாதவர்கள், இவர்கட்கும் விவாகம் செய்து விடுகிறார்கள். இவர்களின் சந்ததிகட்கு என்னபுத்தி யுண்டாகும்.

பெண்களை அவர்கட்கு சம்மதமில்லாத வரன்கட்குக் கொண்டு தள்ளும்போதும், அடுத்த பந்துக்கட்குள்ளே தொடர்ந்து சம்மந்த முண்டாகும்போதும் புத்திக்ஷயமுண்டாகிறது. விருத்தாளுடைய சம்மந்தமும் புத்திக்ஷயத்திற்குக் காரணந்தான். ஆபரணப் பைத்தியத்தாலும் புத்திக்ஷயம் உண்டாகிறது. 'மிச்சம்' பிடிக்கப்பட்ட முதலெல்லாம் ஆபரணத்தில் அடங்கிவிட்டால் புஸ்தகத்திற்குப்பணம் எது, வாசிப்பதேது?

இப்போது ஏற்பட்டிருக்கும் இங்கிலீஷ்க் கல்விப்பயிற்சியாலும் க்ஷயகதிக்குவேண்டியமூலம் இருக்கிறது. கடையாக உள்ள வகுப்பு முதல் முடிபுவரை பரீக்ஷை ஏற்படுத்தி யிருப்பதால்

கேவலம் பரீக்ஷையில் ஜெயிக்கவேண்டிய பிரபை மேலிட்டு இராப்பகலாய் மனனப் படுத்துவதில் ஊர்ஜிதமிழந்து மனனப்படுத்தும் சங்கதிகளை நன்றாய் கிரகிக்க இடமில்லாமல் சப்தரூபமாய் எல்லாவற்றையும் கற்று பரீக்ஷைசெய்த கட்டடத்திற்றானே எல்லாவற்றையும் கக்கி பரீக்ஷைகழிந்த வுடன் நீரில் மூழ்கி நினைப்பொழிகிறார்கள். இதனாலும் புத்திக்ஷய முண்டாகிறது. இதைப்பற்றி சுழிந்த வித்வத் சபாபிரசங்கத்தில் ம-ா-ா-ஸ்ரீ பாஷியமய்யங்கா ரவர்கள் விஸ்தாரமாய் எடுத்துச் சொல்லியிருப்பது சரியே.

எஸ். இராமசாமி அய்யர், பி.ஏ., பி. எல்.

## மாதர்மஞ்சரி.

### VI. மேரி ஸோமர்வில் சரித்திரம்.

#### 2-ம் பாகம்.

1804-ம் வருஷத்தில் மேரி மிஸ்டர் ஸாமுவேல் க்ரேய்க் என்னும் ஒருவனை மணம் புரிந்துகொண்டாள். அவர் கலியாணமான மூன்று வருஷங்களுக்கெல்லாம் இறந்துவிட்டார். புருஷர்களில் தாழ்ந்த மனோசக்தி யுடையவர்கள் ஸ்திரீகளிடத்தில் படிப்பும் புத்திவல்லமையு மிருப்பதைக்காணப் பொறுக்காமல், அவர்கள் அப்படி புத்தி வல்லபமடைவதை யஞ்சி அருவருப்புக்கொள்வது வழக்கம். அப்படிப்பட்டவர்களில் மேரியின் முதற்கணவர் ஒருவராக விருந்ததாகத் தோற்றுகின்றது. அவர் பெண்களின் புத்தி வல்லபத்தைக் குறித்து மிகத் தாழ்வாய் எண்ணுபவராக விருந்ததோடு, சாஸ்திர சம்பந்தமான விஷயங்களில் ஞானமாவது, ஞானமடைய வேண்டுமென்கிற விருப்பமாவது அவருக்கு இல்லை. புருஷனை விட மனைவி புத்தியிலும் வித்தையிலும் மேம்பட்டவளாக விருந்தபோதிலும், மேரி வித்தியா கர்வமடைந்தவளாகவின்றி, பெண்களுக்குரிய அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்னும் குணங்களைக் கைவிடாமல் அதிக அடக்கம்பாராட்டித் தன் புருஷனுக் கினியவளாக நடந்துகொண்டு வந்தாள். 1807-ம் வருஷத்தில் அவள் கணவனிறந்தபொழுது அவளுக்கு வயது 27. இரண்டுபிள்ளைகள் பிறந்திருந்தன. வேறு ஆதரவின்றி இளவயதில் வைதவ்யமடையவே, மேரி தன் குழந்தைகளுடன் அவள் தகப்பன் வீடு வந்தடைந்து, அவருடைய போஷணையின் கீழ் வசித்துவந்தாள். அங்கு வசித்து வருகையில் அவள் அதிக உறுதி ஊக்கத்தோடு கணிதசாஸ்திரம் பயின்று வந்தாள். எடின்பரோ கல்விச் சங்கத்தில் கணித சாஸ்திர பண்டிதராகிய வாலேஸ் என்பவரிடம் பாடம் கற்றுக்கொண்டு பயனடைந்து அக்காலத்தில் கணிதசாஸ்திரப்பயிற்சி அபிவிர்த்திக்காக ஏற்பட்டிருந்த ஒரு சங்கத்தார் கணித சாஸ்திரத்தில்தேர்ச்சியடைந்தவர்க்களித்த வெள்ளிப்பதக்க மொன்று தனக்குப் பரிசாகக் கிடைக்கும்படியான விற்பத்தி பெற்றாள்.

அவளுடைய குடும்பத்தைச் சேர்ந்தவர்களெல்லாரும், மேரி இஷ்டஜனர் சபையில் கூடிக் குலாவி யுறவாடிச் சந்தோஷித் திருப்பதற்குப் பதிலாக, சாஸ்திரக் கியானத்தில் தேர்ச்சிபெற வேண்டி ஊக்க முடனுழைத்து வருவதைப்பற்றி முறையிட்டு, அவள் அப்படி செய்து வருவது முட்டாள் தனமான குணக்கு நடத்தையாக விருக்கிறதென்று நாலாபக்கத்திலும் அவளை யிடித்துக்கூறிப் புத்தி சொல்லி வந்தார்கள். அவள் உறவினர்களில் கிட்டதட்ட எல்லாரும் அவள் படிப்பதும் புத்தி விர்த்திக்கு ஏதுவான முயற்சிகள் செய்வதுமே வேலையாக விருப்பதை யங்கீகரிக்காமல் புகார்செய்து வந்தாலும், 'ஸோமர்வில்' என்னும் பேருடைய அவள் சிற்றப்பா, சிற்றன்னையும், அவர்கள் புத்திரன் 'உவில்லியம் ஸோமர்வில்' என்பவரும் அவளுடைய இதர உறவினர்கள் அவள்படிப்பதற்கு விரோதமாய்க் கத்திய குருட்டுக்கத்தலில்சேர்ந்துகொள்ளவில்லை. அவர்கள் இவளுக்குள்ள படிப்பு விருப்பத்தில் அநுதாபமுள்ளவர்களாய் இவளை மிகப்பக்ஷத்தோடும் பிரீதியோடும் நடத்தி வந்தார்கள். அவர்களுடைய வீட்டில் இவள் சிலகாலம் தங்கநேரிட்ட பொழுது எல்லாம் இவளுடைய மனதுக் கிசைந்ததாக விருக்கக்கண்டு வெகுசந்தோஷத்தோ டிருந்து படிப்பை விர்த்திசெய்து வந்தாள். இப்படிக் கொஞ்சகாலமிருந்துவருகையில் இவளுக்கும் இவளுடைய சிற்றன்னை

பிள்ளை உவில்லியமுக்கும் பரஸ்பர நேசமுண்டாகி வளர்ந்துவர, 1812-ம் வருஷத்தில் இருவரும் மணமுடிக்கப் பெற்றார்கள்.

இந்தஇரண்டாவதுவிவாகமானபின் மேரி 50 வருஷகாலம் அவள்கணவனேடிருந்து சுகித்து வாழ்ந்தாள். இவளைக்கலியாணம் செய்து கொண்டபோது இப்பேர்ப்பட்ட மனைவிகிடைத்தாளேயென்று இவளுடைய கணவர் பாராட்டிய பெருமையும் சந்தோஷமும் இவர்கள்இல்வாழ்க்கை நடத்திய 50-வருஷகாலத்திலும் குறையாமல் அப்படியே யிருந்துவந்தது. இவ்விவாகம் நடந்தது மேரிக்கும் வெகு சந்தோஷமாக முடிந்தது. அவள் பிறந்தநாள் முதல் அது வரையில் அவள் தன் மனப்போக்கிற்கும் தனது எண்ணங்கள் அவாக்களிற்கும் ஒவ்வாத மனோபாவமுள்ளவர்களோடேயிருந்து காலந்தள்ளிவரவேண்டியிருந்தது. அவளுடைய ஆயுசுகாலத்தில் இப்பொழுது தான் முதல் முதல் அவள் தன்னிடத்து முற்றும் அனுதாபமுள்ளஒருவருடைய நித்திய சகவாசத்தையனுபவிக்கும் பாக்கியமுள்ளவளானாள். அவளால் உலகுக்குண்டான பாக்கியமெல்லாம் அனேகமாய் அவள் கணவரால் தான். ஏனெனில் அவர் அவளுடைய மனோசக்திகளைத் தூண்டிவிட்டு, அவளுக்கு இருந்த அபூர்வ வல்லமையை வெளிப்படுத்துவதற் கேதுவான எவ்விஷயத்திலும் சந்தோஷமெடுத்துக் கொள்பவராயிருந்தார். அவர் அந்த அம்மாளுக்கு அவ்வளவு ஒத்தாசையாக விருந்து அவள் மனதை உல்லாசப்படுத்தி யிராவிட்டால், அவளிடத்திருந்து தோன்றிய அபூர்வசக்தியவ்வளவும் உலகிற்குப் பயன்படாது அவள் மனத்துள்ளே அமுங்கிக்கிடந்திருக்கு மென்பதைக்குறித்துச் சந்தேகிக்க இடமில்லை. மேரியின் கணவராகிய மிஸ்டர் ஸோமர்வில் இராணுவ வைத்தியராக விருந்தார். சாஸ்திர சம்மந்தமான விஷயங்களில் அபிவிர்த்தியடைய மனதைச் செல்லவிட்டுழைப்பது அவர்மனதுக்கு முற்றும் ஹிதமாயிருந்தது. அவர் கற்றுத் தேர்ந்து நன்றாகப்பயிர்ச்சி பெற்றபுத்திநுட்பமுடையவர். அவர்மனைவிக்கு உதவிபுரிவதே அவருக்குப் பெரும்பாக்கியமெனக் கருதியுழைத்து வந்தவர். மேரி ஸோமர்வில் சாஸ்திரக்கியானத்தில் அதிகவிற்பத்தி யடைந்து சாஸ்திர சம்பந்தமான விஷயங்களைப்பற்றி ஜனங்களுக்கு எளிதில் விளங்கும்படியான புஸ்தகங்களெழுதி வந்த பொழுது, அவர் அவளுக்கு உபயோகமாயிருக்கும் புஸ்தகங்களைப் பெரியபுத்தக சாலைகளிற் சென்று தேடிப்பார்த்து எடுத்து வந்து கொடுப்பதும், அவள் எழுதிய விஷயங்களை திருப்பித் திருப்பி நகல் செய்து கொடுப்பதுமாக அந்தம்மாளுக்குச் செய்த உதவி கொஞ்சமல்ல. அவர்களுடைய புத்திரி சொல்லியபடி "அவளுக்காக அவர் எவ்வளவு தொந்தரவுக்காளாக வேண்டியிருந்தாலும் அதை அவர் தொந்தரவாகப்பாராட்டுவதில்லை. அவர் உழைத்த உழைப்புக்கெல்லாம் பிரீதியே காரணமாயிருந்தது."

மேரி ஸோமர்வில் சாஸ்திர சம்பந்தமாய்எழுதிய கிரந்தங்களினால் உலகப்பிரசித்தியான பிரக்கியாதி பெற்று விளங்கிய பொழுது, முன்னால் அவள் படிப்பில் பிரியமுள்ளவளாய் அவள் மனோபிவிர்த்தியிலே காலத்தைப்போக்கி வருவதைக்கண்டு பரிகசித்த அவள் உறவினர்களெல்லாம் இப்பொழுது அவளைப் பிரமாதமாகத் துதிக்கத் தொடங்கினார்கள். ஆனால் அவர்களுடைய சந்தோஷத்தையும் திருப்தியையும் மேரி மதிக்கவில்லை. ஏனென்றால் அவர்கள் அபிப்பிராயம் என்னபெறுமென்று அவளுக்கு நன்றாகத்தெரியும். ஆனால் அவளுடைய கணவர் அவளுக்குப் பேரும் புகழும் வந்ததைப்பற்றிப் பட்ட சந்தோஷத்தையும்பெருமையையும்கண்டு அவள் மனதுருகிப்போனாள். அதைப்பற்றி அவளே பின்வருமாறு எழுதியிருக்கிறாள்: "என்னுடைய முயற்சி பலித்து எனக்குப் பேரும் புகழும் வந்ததைப்பற்றி என் கணவர் உளம்பூரித்துக் கொண்டாடினதைப்பார்க்க என்மனது உருகிவிட்டது. ஏனெனில் என்னுடைய ஜயகாலத்தைக்கண்டு அவர் சந்தோஷப்பட்டதைப்போல் பதினாயிரத்திலொருவர் கூட அவ்வளவு உண்மையாகச் சந்தோஷப்பட்டிருக்க மாட்டார். இன்னொருவராயின் முதலில் சந்தோஷப்பட்டுப் பிந்தி அசூயை யடையக்கூடும்; அவர் தயாளசுபாவமுடையவரும், பொறாமைப்படும் இழிகுண மற்றவருமா யிருந்தபடியால், அவர்

ஆயுள்கால முழுமையும் நான்செய்த காரியங்களிலெல்லாம் மகாபிரீதியோடு அக்கரை யெடுத்துக்கொண்டு வந்தார்.''

மேரி ஸோமர்விலுக்கு இப்படிப்பட்ட பேரும் புகழும் கிடைப்பதற்குக் காரணமாயிருந்த புஸ்தகங்களில் முதல்முதல் அவள் எழுதி வெளியிட்டது வான சாஸ்திர சம்பந்த மானது. அதற்கு "வர்னசூக்ஷ்மம்" (அதாவது, வானத்தில் கிரகங்கள் முதலியன அமைந்திருக்கும் சூக்ஷமத்தை விளக்கும் நூல்) என்று பெயரிட்டாள். இப்புஸ்தகம் அவள் எழுத நேரிட்ட விவரத்தைக்கேட்க இனிமையாக விருக்கும். இது வரையில் அவள் தன் மனோ விர்த்தியார்த்தம் படித்து வந்தாளே யன்றி அச்சிட்டுப் பிரசுரிக்கப் புஸ்தகங்கள் ஒன்றும் எழுதியதில்லை. 1827ஆு மார்ச்சுமீ" லார்ட் ப்ருஹாம் அப்பொழுது பரசித்திபெற்று பரோபகாரமான வேலை செய்துவந்த "உபயோகமான அறிவைப் பரவச்செய்யும் சபை''யின் பேரால் மிஸ்ஸஸ் ஸோமர்விலுக்கு ஒரு கடிதமெழுதினர். அதில் அவள் நியூடன் ஜடதத்துவ சாஸ்திரியார் எழுதிய மிக உயர்ந்தசாஸ்திர நூலாகிய 'ப்ரின்ஸிபியா' என்பதைப்பற்றியும் லாப்ளேஸ் என்னும் பேர்பெற்ற தத்துவசாஸ்திரியார் வான சாஸ்திரத்தைப் பற்றி யெழுதிய இன்னொரு புஸ்தகத்தைக் குறித்தும் விவரித்து சில புஸ்தகங்க ளெழுத வேண்டுமென்று விண்ணப்பம் செய்து கேட்டுக்கொண்டார். பின் சொன்ன வானசாஸ்திர புஸ்தகத்தைக் குறித்து அவர் எழுதிய கடிதத்தில் பின்வருமாறு வரைந்திருந்தார்:—"இங்கிலாந்தில்இம்மகாசாஸ்திரநூலின் பேரைக் கேட்டதன்றி மற்றப்படி இதைப்பற்றி யொன்று மறியாதவர்கள் 20 - பேர்கள் இருப்பார்களோ என்னமோ; இதன் பேரைமாத்திரமாவது கேட்ட வர்கள் 100-பேர்கள்கூட இருக்க மாட்டார்கள். மிஸ்ஸஸ் ஸோமர்வில் இப்புஸ்தகத்தைப் பற்றித் தெளிவாக எழுதினல் இந்த இரண்டு தொகைகளின் பின்னும் இரண்டு சுன்னங்கள் சேர்க்கும்படி செய்ய அவளாலாகு மென்று யான் உறுதியாய் நம்புகிறேன்." அதாவது அவள் மூலமாக 2,000பேர் அதைவாசித்தறியவும் 10,000ஜனங்கள் அதைப்பற்றிக் கேள்விப்பட்டறியவும் கூடுமென்று எழுதினர்.

இப்படி அவர் அவளைக் கேட்டுக்கொண்டதைப்பார்த்து மிஸ்ஸஸ் ஸோமர்வில் அதிசயம் பொறுக்கமாட்டாமல் திகைத்துப் போனள். "கடலேயனையம் யாம் கல்வியா லென்னும் அடலேறனைய செருக்கு"* அவள் மனத்திலுதித்ததே யில்லை. அவள் தன்னுடைய வித்தியா வல்பத்தைப்பற்றி மிகத் தாழ்மையாக மதித்து வந்ததோடு தன்னல் அதிகமாக ஏதாவது செய்ய முடியுமென்கிற நம்பிக்கை யில்லாதவளாயிருந்தாள். அவள் தானகப்படித்துச் சம்பாதித்துக்கொண்ட அறிவும் கியானமும் கலாசாலைகளில் மகா பண்டிதர்கள் போதனையின் கீழ் பிரத்தியேகமாகப்படித்து விர்த்தியடைந்த வித்வான்கள் அறிவையும், கியானத்தையும்விட எவ்வளவோ குறைந்ததாக விருக்குமென்றும், வானசாஸ்திர விஷயமாகத்தான் எழுத யத்தனிப்பது ஆகாத் துணிகரமாயிருக்குமென்றும் அவள் உண்மையாகவே நம்பியிருந்தாள். ஆனல் லார்ட் ப்ருஹாம் அவர்களும் அவளுடைய கணவரும் சேர்ந்து அவளுக்கு அடிக்கடிசொல்லி அவளை அவர் கோரிக்கைக் கிணங்கும்படி வற்புறுத்தி வந்ததனல் அவர்கள் வார்த்தைக்கிசைந்து, அவள் அப்புஸ்தகம் எழுத யத்தனம் செய்து பார்ப்பதாகச் சொல்லி அதற்கும் ஒரு நிபந்தனை ஏற்படுத்திக் கொண்டாள். அதாவது,—அவள் எழுதும் விஷயம் அவளை யெழுதும்படி வற்புறுத்தும் அவர்கள் எண்ணியிருக்கும் எண்ணப்படி சரியாக விராவிட்டால், அவ் வெழுத்துப் பிரதிகளை யெல்லாம் உடனே நெருப்பிலிட்டு நாசம் செய்து விட வேண்டு மென்று முன்னிட்டுப் பேசித் திட்டம்செய்து கொண்டாள். இப்படியாக திடீரென்று அவள் ஜீவனவகையும் தொழிலும் நூதனமாக மாறி விட்டது.

இப்படி திடீரென்றுபுஸ்தகமெழுதி கிரந்தகர்த்தாவாகத் துணியும்படி நேரிட்டதற்கு மேலே சொல்லிய தூண்டுதலன்றி அக்காலம் அவர்கள் ஆஸ்தியையெல்லாம்கிட்டத்தட்ட இழந்துவிட்டுக் கஷ்டதிசையி லிருந்ததும் ஓர் தூண்டுதலாயிருந்திருக்குமென்று எண்ணக் கூடியதாயிருக்கிறது. கிரந்தகர்த்தாவாகி புஸ்தக மெழுதிப் பிரசுரிப்பது வழக்க மாய்விடுகிறவரையில் அத்

* நன்னெறி.

தொழிலில் முயற்சிக்கக் கஷ்டதிசையின் உபத்திரவம் பெரும்பாலும் வேண்டியதா யிருக்கிறது. தரித்திரத்தின் உபத்திரவ மிருந்தால்தான் படித்தவர்கள் சாதாரணமாகப் புஸ்தகமெழுதுவதற் கவசியமான உழைப்பும் பிரயாசையும் எடுத்துக் கொள்வதற்கு வேண்டிய தூண்டுதலுண்டாகிறது. இல்லாவிட்டால் புஸ்தகமெழுதிப் பழக்கப்படாதவர்கள் புஸ்தகமெழுத வேண்டுமென்று கொள்ளும் விருப்பம் காரியத்தில் சரிவர நிறைவேறி முடிகிறதில்லை.

சாதாரணமாக கிரந்தகர்த்தா வாவதற்கு இவ்வளவு இடையூறுகளுண்டானல் மிஸ்ஸஸ் ஸோமர்வில் விஷயத்தில் அவ்விடையூறுகள் இன்னும் மிகுதியாக விருந்தன. மேரி ஸோமர்வில் இக்காலத்தில் அவளுடைய ஜீவவிர்த்தாந்தங்களை யெல்லாம் குறிப்பிட்டு வைத்து வந்த ஞாபகக் குறிப்புப் புஸ்தக மொன்றிருக்கிறது. அவள் பலகுழந்தைகளைப் பெற்றதாயும் ஒரு பெரிய குடித்தனத்திற்குத்தலைவியுமாக விருந்தால் இத்தருணம் புஸ்தகமெழுதுவதற்கு ஒழிவுக்காலம் கிடைக்காமல் அவள்பட்ட கஷ்டங்களையெல்லாம் பற்றி அதில் எழுதி யிருக்கிருள். அவள் தன் வீட்டுவேலைகளையும் குடித்தனக் காரியங்களையும் ஒன்றுவிடாமல் செய்துவிட்டு, வருவார் போவார்க்கு உபசாரஞ்சொல்லி மற்றும் வீட்டுக்குப் பெரியவளா யிருக்கப்பட்ட ஸ்திரீ கவனிக்கவேண்டிய விஷயங்களையெல்லாம் கவனித்துவிட்டுக் கொஞ்ச நெஞ்சம் ஒழிந்த வேளைகளிலேயே புஸ்தக மெழுத உட்காருவாள். அப்பொழுதும் அவ்வேலைக்கு எத்தனையோ இடையூறுகள் நேரிடும். அக்காலத்தில் அவர்கள் பட்டணத்துக்கு எட்டாமையில் ஒதுக்குப் புறமாயிருந்த 'செல்ஸி'என்னும் இடத்தில் வசித்துக் கொண்டிருந்தார்கள். அவ்வளவு தூரத்தில் வசித்துக் கொண்டிருக்கையில் அவளைப்பார்க்க வேண்டுமென்று தொலைதூரம் நடந்துவந்தவர்களைப் பார்க்காம லனுப்புவது குரூரமாயிருக்குமென்று, அவள் வந்தவர்களையுபசரித்தழைத்துப் பேசிவந்தாள். ஆனல் அப்படிச் செய்துவந்ததில் அவளுக்குண்டான தொல்லைகள் கொஞ்சமல்ல. ஏதாவது விளங்கற்கரிய விஷயத்தைச் சிக்கறுத்து விளங்கவைக்கும் வகையென்னவென்று முழுமனதோடும் யோசித்துக் கொண்டிருக்கையில், நல்லெண்ணமுள்ள நேசர் யாராவது ஒருவர் வந்து வெகு சாந்தமாய் "உன்னோடு இரண்டொருமணி நேரம் உல்லாசமா யிருந்துவிட்டுப் போகலாமென்று வந்திருக்கிறேன்" என்று சொல்வர். இப்பேர்ப்பட்ட தொல்லைகளைப்பற்றி நினைக்கும்போது அவள் பெருமூச்சுவிட்டுப்புலம்புவாள். இப்படி அவளுக்குநேர்ந்த இடையூறுகள் எண்ணிறந்தவாயினும், அவள் எழுதத் துணிந்த வானசாஸ்திர விளக்கப் புஸ்தகம் நாளுக்கு நாள் விர்த்தியடைந்து வந்து ஒரு வருஷத்திற்குள் பூரணமாய் எழுதி முடிக்கப்பட்டது. அப்புஸ்தகத்துக்கு அவள் "வான சூக்ஷ்மம்" என்று பேர்கொடுத்தாள். அப்புஸ்தகம் அச்சிட்டு வெளியிடப் பட்டதும் அதை யெழுதின கிரந்த கர்த்தாவுக்குப் பெருங் கீர்த்தியும் பிரதாபமும் வந்து விட்டது. அக்காலத்துள்ள சாஸ்திரக் கியானிகள், சாஸ்திர விஷயமா யெழுதும் கிரந்த கர்த்தாக்கள் இவர்களில் முதன்மையானவர்களுக்குச் சமமாக அப்புஸ்தக மெழுதினவளும் மதிக்கப்பட்டு அப்படியே பேரும் அந்தஸ்தும் பெற்ருள். உடனே அவள் அப்பொழுதிருந்த வானசாஸ்திர சங்கத்திற்கு ஒரு கௌரவ மெம்பராகத் தெரிந்தெடுக்கப்பட்டாள்.* அதையொட்டி இன்னும் எல்லாவித கௌரவங்களும் வெகுமானங்களும் ஒன்றின்மே லொன்ருக அவளுக்கு அளிக்கப்பட்டன.

அக்காலத்தில் பிரக்கியாதிபெற்று விளங்கிய சான்ட்ரீ என்னும் சிற்பசாஸ்திரியால் மார்புவரையில் அவளுடைய பதுமையொன்றுசெய்வித்து அதை "ராயல் ஸொஸைடி" என்னும் மகா சாஸ்திக்ஞர்களெல்லாம் சேர்ந்த உந்த சங்கத்தின் மாளிகையில் வைத்தார்கள். டப்ளின் நகரிலுள்ள "ராயல் அகாடமி" என்னும்மகா வித்வ

* மேரி ஸோமர் விலோடு சாஸ்திரக்கியானத்தில் நிபுணத்துவம் பெற்று விளங்கிய இன்னொரு மாதும் அவ் வானசாஸ்திர சங்கத்துக்கு மெம்பராக நியமிக்கப்பட்டாள். அந்த மாதின்பேர் 'கரொலைன் ஹெர்ச்செல்' அந்த அம்மாளின் சரித்திரத்தைத்தனியாக வாசித்தறிந்து கொண்டால் அவளுடைய மேன்மை விளங்கும். ஆனல் அவளைப்பற்றி இங்கு விஸ்தாரம் பேச சந்தர்ப்பமில்லை.

சங்கத்திலும் இன்னும் அனேக சாஸ்திர சங்கங்களிலும் அவள் கௌரவ மெம்பராகச் சேர்த்துக் கொள்ளப்பட்டாள். இக்கீர்த்திப் பிரதாபங்களெல்லாம் கிடைத்த கொஞ்சகாலத்துக்குப் பின், 1835-ம் வருஷத்தில் அப்போது அங்கிலேய முதல்மந்திரியாக விருந்த ஸர் ராபர்ட் பீல் என்பவர் இவளுடைய சாஸ்திர நிபுணத்துவத்தை மதித்து சர்க்காரிலிருந்து இவளுக்கு வருஷத்தில் 200-பவுன் உபகாரச் சம்பளம் கொடுத்தாதரித்தார். இப்படி உபகாரச் சம்பளம் கொடுக்கப்பட்ட சங்கதி தெரியவந்ததோடு முன் நேர்ந்ததாகச் சொன்ன நஷ்டத்துக்குப் பின்னிருந்த அவளுடைய சொந்த ஆஸ்தியும், அவளுடைய கணவர் பேராலிருந்த ஆஸ்தியும் அவைகளைக் கொடுத்திருந்த புண்ணியவான்கள் செய்த மோசத்தால் இழந்துவிட்ட சமாசாரமும் வந்து சேர்ந்தது. சாஸ்திரக்கியான அபிவிர்த்தி விஷயமாய் அவள் செய்த உதவியைத் துரைத்தனத்தார் நன்குமதித்துதவிய உபகாரச் சம்பளம் அவளுக்கு நல்ல தருணத்தில் கிடைத்தது. சில வருஷங்களானபின் இந்த உபகாரச் சம்பளம் லார்ட் ஜான் ரஸ்ஸல் மந்திரியாக விருக்கையில் அவரால் 300-பவுனாக உயர்த்தப்பட்டது.

மிஸ்ஸஸ் ஸோமர்வில் இளம்பிராயமுதல் அவளுடைய ஆயுள்கால முடிவுவரையில் ஸ்திரீகளின் நிலைமையை விர்த்திசெய்து அவர்களை நல்ல பதவிக்குக் கொண்டுவருவதற்கு ஆஸ்பதமான எல்லா விஷயங்களிலும் அனுதாபமுள்ளவளாய் அவற்றைத்தன்னாலானவரையில் ஆதரித்து வந்தாள்.

அவள் சுத்தச் சிறு பெண்ணாயிருக்கையில், ஸ்திரீகளின் நிலைமையைச்சீர்திருத்தி முன்னுக்குக் கொண்டுவருவதில் தான் உபயோகமுள்ளவளாக விருக்கக்கூடும் என்கிற எண்ணத்தினால் அதிக கஷ்டப்பட்டு வாசிக்கத் தூண்டுதலுண்டாயிற்று. அவள் 16-வயதுள்ளவளாயிருந்தகாலத்தைக் குறித்து எழுதுகையில் அவள் பின் வருமாறு கூறுகிறாள்:—"நான் செய்துவந்த முயற்சிகள் எதிலும் பணம் சம்பாதிக்க வேண்டுமென்கிற எண்ணம் என் மனதில் உதித்ததேயில்லை; ஆனால் ஏதாவது ஒருவிதத்தில் நான் மிக மேலானவளாக வேண்டுமென்கிற அடங்கா ஆசைமட்டும் எனக்கு அதிகமாயிருந்தது; ஏனென்றால் என்னுடைய பால்ய காலத்தில் ஸ்திரீகள் எவ்வளவு தாழ்ந்த நிலைமையிலிருந்தார்களோ அதைவிட அவர்கள் உயர்ந்த நிலைமையிலிருக்கப் பாத்திரர்களாகச் செய்துகொள்ளும் சக்தி அவர்களுக்கு உண்டென்பது என் மனதிற் பட்டது. அந்தப்படி நடந்துகாட்ட வேண்டுமென்று நான் பேரவாக் கொண்டேன்."

அங்கிலேய நாட்டிலும் அமெரிக்கா நாட்டிலும் இப்போது ஸ்திரீகளுக்குஅதிக சுதந்தரங்கள் வேண்டு மென்று, அச்சுதந்தரங்கள் அவர்களுக்குக் கிடைப்பதற்காக ஸ்திரீகளே அனேகர் முன்னிட்டு நின்று அதற்கு வேண்டிய பிரயத்தனங்கள் செய்துவருகிற விஷயம் தற்கால உலக வர்த்தமானங்களை விசாரிக்கும் யாவர்க்கும் தெரிந்தது. மேரி ஸோமர்வில் காலத்தில் இப்பேர்ப்பட்ட கக்ஷியொன்றும் பலமாக ஏற்படவில்லை. ஏற்படாவிட்டாலும் இப்பொழுது ஸ்திரீகளுக்கு வேண்டிய சுதந்தரங்களாகக் கோரப்படும் பலவிஷயங்களில் பிரதமஸ்தராயிருந் துழைத்தவர்கள் பலர் அக்காலத்திலிருந்தார்கள், ஸ்திரீகளும் புருஷர்களுக்குச் சமமாயிருந்து சட்டநிர்மாண சபையில் அவர்களோடு கூடவிருந்து சட்ட நிரூபணம் செய்யும் சுதந்தரம் வேண்டுமென்று சொல்லி அதற்காக இன்றைக்கும் செய்துவரப்படும் முயற்சி அப்பொழுதே ஆரம்பிக்கப்பட்டதுதான். பார்லிமெந்து சபைக்கு மெம்பர்கள் நியமனம் செய்ய ஸ்திரீகளுக்கும் அதிகாரம் கொடுக்க வேண்டுமென்று மிஸ்டர் ஜான் ஸ்டூவர்ட் மில் என்னும் மகான் அப்பொழுதே பெரு முயற்சிசெய்து வந்தார். 1868-ம் வருஷத்தில் இது விஷயமாய் மிஸ்டர் ஜான் ஸ்டூவர்ட் மில் முதல்முதல் ஒருமனுத் தயார் செய்து பார்லிமெந்து சபையாருக்குக் கொடுத்தார். அம்மனுவில் கையெழுத்திட்டவர்களில் முதலாவதாக விருந்தது 'மேரி ஸோமர்வில்' கையெழுத்து. அப்பொழுது செய்யத் துவங்கிய முயற்சி இன்னும் முற்றும் பயன்பெற வில்லையாயினும் அக்கக்ஷியைச் சேர்ந்தவர்கள் இன்றைக்கும் அலுப்பு சலுப்பின்றி விடாமுயற்சி

யாக வுழைத்து வருகிறார்கள். அக்காலத்தில் லண்டன் யூனிவர்ஸிடி' கல்விச்சங்கத்தார் இப்பொழுதைப்போலின்றி, பெண்பாலார்க்கு வித்தியா பட்டங்கள் அளிப்பதில்லை யென்றிருந்தார்கள். இந்த விலக்கு அநியாய மானதென்று சொல்லி பெண்பாலாரும் புருஷரைப்போல் படித்துத்தேர்ந்தால் அவர்களுக்கும் வித்தியா பட்டம் அளிக்கவேண்டு மென்று மேற்படி சங்கத்தார்க்கு முதல்முதல் செய்துகொள்ளப்பட்ட விண்ணப்பத்திலும் மேரி ஸோமர்விலுடைய கையெழுத்தைக் காணலாம். இவ்விண்ணப்பம் அப்பொழுது பலிக்காமற் போய்விட்ட போதிலும் அப்புறம் சில வருஷங்களுக் கெல்லாம் இவ் விண்ணப்பத்திற்கண்ட பிரார்த்தனை அளித்துவிடப்பட்டது. ஆகவே மேரி ஸோமர்வில் தன் மனோரதம் இப்படி ஈடேறியதைப்பார்க்க ஜீவித்திருக்காமற் போனது விசனிக்கத் தக்கதே. அப்பொழுது இங்கிலாந்தில் பெண்பாலார்க்கு உயர்தரப்படிப்புச் சொல்லிக்கொடுக்க வேணுமென்று அதற்காகப் பலர் பிரயத்தனஞ் செய்துவந்தாலும், பெரும் பான்மையான ஜனங்கள் அதற்கு விரோதமாகவே யிருந்தார்கள். மேரி ஸோமர்வில் ஸ்திரீகளுக்கு உயர்தரப்படிப்புச் சொல்லிக் கொடுப்பதற்கு அனுகூலமாயிருந்து அது விஷயத்தில் அவள் அனுதாபத்தைக்காட்டி வந்து, அவளிறக்குமுன் கணிதசாஸ்திர சம்பந்தமாகவும் மற்றசாஸ்திரங்கள் சம்பந்தமாகவும் அவளிடத்திருந்த அருமையான புஸ்தகங்களும், சாஸ்திரக் கருவிகளுமடங்கிய அவளுடைய சொந்தப் புஸ்தக சாலையைப்பெண்களின் உயர்தர வித்தியாப்பியா சார்த்தம் அவர்களுக்கென்று பிரத்தியேகமாக ஏற்பட்டுள்ள 'கர்டன் காலேஜ்' என்னும் ஸ்திரீ வித்தியாசாலைக்கு அளித்து மரணசாதன மெழுதி வைத்துக் சென்றாள். அவள் இப்படி யளித்த புத்தகங்கள் அவ்வித்தியா சாலையில் இன்றைக்கும்பெருமையாகக்கொண்டாடப்படுகின்றன. அவளளித்த புஸ்தகங்க ளெல்லாம் அதற்காகச் செய்த நேர்த்தியான கண்ணாடியறையில்அழகாக அமைக்கப்பட்டிருக்கின்றன. அவ்வறையின்மேல் 'சான்ட்ரி' யென்னும் சிற்பசாஸ்திரி செய்த மேரி ஸோஸமர்வில் அம்மாளின் மார்புவரையிலுள்ளள பதுமையின் பிரதியுருவமொன்றுஎடுத்துவைக்கப்பட்டிருக்கிறது. அழகும் நேர்த்தியுமான அவள் முகச்சாயலில் பெண் தன்மையும் புத்திவன்மையும் விர்த்தியடைந்து ஒன்றுக்கொன்று ஏற்றத்தாழ்வின்றி இரண்டுமிசைந்துபிரகாசிக்கும்தோற்றமானது அவ்வித்தியாசாலையில் படிக்கும் மாணுக்கர்களுக்கு பெண்மையின் குணம் குறி சக்திகள்யாவும் பூர்ணவிர்த்தியடைந்து விளங்கும் பெண்வடிவைக்காட்டும் மனோ பிம்பக் காக்ஷியாக விளங்குகிறது.

மிஸ்ஸஸ் ஸோமர்வில் 'வான ஸூக்ஷ்மம்' என்னும் புஸ்தகமெழுதிப் பிரசுரித்தபின் 'ஜடதத்துவ சாஸ்திரங்களின்சம்பந்தம்'என்று ஒருபுஸ்தகமும், 'பௌதிகபூகோளம்' என்கிற புஸ்தகமும்,'அணுக்களையும் அணுதரிசன முறையையும் குறித்த சாஸ்திரத்தை விளக்கும் நூல்' ஒன்றும் எழுதிப் பிரசுரித்தாள்,

கடைசியாகக் குறித்த புஸ்தகம் அவளுடைய 80-வது வயதுக் கப்புறம் எழுத ஆரம்பிக்கப்பட்டது. அவளுடைய மனோசக்திகள் அவள் விசேஷவயோதிகமடைந்த காலம்வரையில் குறைவுபடாம லிருந்தன. அவள் சாகும் நாள்வரையில்அவளுடைய தேகதிடனும் விசேஷமாகவே யிருந்தது. ஸ்திரீகள் மனோமுயற்சி செய்தால் அவர்கள் தேகபலனுக்குக் குறைவு வருமென்று சொல்லும் போலி வாதத்தின் பிசகை ரூபிக்க அவள் பிரத்தியக்ஷ உதாரணமாக விளங்கினாள். அவள் பிராணன் உடலைவிட்டுப் பிரிந்த அன்றைத் தேதிவரையில் அவள் புஸ்தகமெழுதுவதிலும் வாசிப்பதிலும் வேலையாக இருந்துவந்தாள். இப்படி அவளுடைய கடைசிவாழ்நாள்வரையில 'Theory of Differances' என்னும் கணிதசாஸ்திர நூலெழுதுவதும், 'Quaternions' என்பதைக்குறித்த ஒரு கணிதசாஸ்திர புஸ்தகம் வாசிப்பதும் வேலையாக இருந்தாள். அவளுடைய அந்திகாலத்தில் அவளுக்குக் காதுகேட்காம லிருந்தது ஒன்றைத் தவிர வேறு தேகசக்திக்குறைவு ஒன்றுமில்லாமலிருந்தாள். அவள் சாகுங் காலம்வரையில் வெளியில்போய் நடமாடி அவள் ஜீவனை அனுபவிக்கக் கூடியவளாக விருந்தாள். அவள் சாவதற்குச் சற்றுமுன் தன்ஞாபகக் குறிப்புப் புஸ்தகத்தில் தனக்கு யாதொரு குறைவுமில்லை

யென்றும் தான் சாகப்போகிறகாலம் நெருங்கி விட்டதால் தான் இவ்வுலகைவிட்டுப் போகச் சித்தமாயிருக்கிறதாகவும் எழுதி, அவளுடைய பெண் அவள்கிட்டஇருந்து செய்துவரு முபசாரங்களைப்பற்றிச் சந்தோஷப்பட்டவளாகக் குறிப்பிட்டுக் கடைசியில் "நான் பூர்ணசந்தோஷமுள்ளவளா யிருக்கிறேன்" என்று குறித்து அவள் ஞாபகக்குறிப்பை மூடிவிட்டு 1872-ஷு நவம்பர்மீ 29உ இராத்திரி தூங்கிக் கொண் டிருக்கையில் தேக வியோகமானாள். அவள் இறந்தபொழுது அவளுக்கு வயது 92. அத்தனை வயதுசென்ற காலத்திலும் அவள் பொதுவிஷயங்களைப்பற்றி பால்யப்பிராயத்தில் எவ்வளவு அக்கரை யெடுத்துக்கொண்டு வந்தாளோ அவ்வளவு அக்கரையெடுத்துக்கொண்டதாக அவளுடைய தினசரி ஞாபகக் குறிப்புப்புஸ்தகத்தில் அவள்கடைசிநாட்களில்குறிப்பிட்டிருக்கும் சில குறிப்புகளால் தெரியவருகிறது. "எனக்கு வயது மிக அதிகமாக ஆய் விட்டபோதிலும் அப்போதப்போது நடக்கும் சம்பவங்களில் எப்போதும்போல் நான் அக்கரை யெடுத்துக்கொள்பவளா யிருக்கிறேன். சமுத்திரத்தில் காணப்படும் நீரோட்டங்களின் உற்பத்தி ஸ்தானத்தைக் கண்டுபிடிக்கப் பிரயாணப்பட்டுப் போயிருக்கிறார்களே, அவர்கள் முயற்சியின் பலன் இன்னதென்று தெரிகிறவரையில் ஜீவித்திருக்க மாட்டேனேயென்று விசனப்படுகிறேன். சுக்கிரனுடைய ஓட்டத்தினால் சூரியனுக்கும் சந்திரனுக்குமுள்ள தூரத்தைக் கண்டுபிடித்துத் தீர்மானிக்கச் செய்துவரும் முயற்சியின்பலனையும் நீலநதியின் முகத்துவாரத்தைக் கண்டுபிடிக்கப் போயிருக்கும் டாக்டர் லிவிங்ஸ்டனுடைய பிரயாணம் சித்தி பெற்றதையும் கேட்க ஜீவித்திருக்கமாட்டேனேயென்றும் விசனமா யிருக்கிறது. எல்லாவற்றையும் விட ஆபிரிகாவில் அதி குரூரமான அடிமைவியாபாரம் நடக்கிறதாகத்தெரியவந்து அதை அடக்குவதற்காக 'ஸர் பார்ட்ல் ப்ரீர்' என்பவர் படையெழுப் பிரயாணப்பட்டுப்போயிருக்கிறாரே அதன் முடிவைக் கேட்கும் வரையி லிருக்கமாட்டேனேயென்று மிகவும் விசனிக்கிறேன்"—என்று இப்படி அநேகம் குறிப்புகள் எழுதியிருக்கிறாள். நமக்குள் படித்த புருஷர்களும் அநேகர் வயிற்றுப்பாட்டைப்பார்த்துக் கொண்டு 'கிணற்றுத் தவளைக்கு நாட்டுவளப்பமேன்' என்றிருக்கிறார்கள். இவள் சாகப்போகிற கிழமாயிருந்தாலும் பொதுஜனாபிமானத்தாலும் வித்தியாபிமானத்தாலும் அவள் ஆயுள்காலத்தில் நிறைவேறாத சில பொது விஷயங்கள் நிறைவேறின சங்கதி கேட்டுவிட்டுப் போவதற்கில்லையே யென்று விசனமுறுவதைக் காண்கிறோம்.

C. V. S.

---

## நடுவேனிற்கனவு.

### 5-ம் அங்கம்.

(331-வது பக்கத்தொடர்ச்சி முடிவு.)

[பிலாஸ்ட்ரேட் பின்னும் வருதல்.]

பிலாஸ்ட்ரேட்:—என்னாண்டவனே, கூத்தின் ‡முன்னுரைசித்தமாயிருக்கிறது; உத்தரவானால்தொடங்கச்சொல்லுவேன்.

தீஸியுஸ்:—முன்னுரை ஆரம்பிக்கப்படுக. (உள்ளில் காளம் முதலிய வாத்தியம் கோஷித்தல்).

[முன்னுரைகூற க்வின்ஸ் வருதல்.]

முன்னுரை:—*நாங்கள் செய்வது அபசாரமென்னின், நாங்கள் வருவது அவ்வெண்ணத்தோடு. அன்று எங்களுக்குள்ள அற்பத் திறமையைக்காட்ட உண்மையான ஆவலோடு வருவோம்; எங்கள் உத்தேசமதுவே; யோசியுங்கள்; வருகிறோம், கெட்ட எண்ணத்தோடு. வரவில்லை நாங்கள் உங்களைத் திருப்திப்படுத்தக்கருதி. உங்கள் சந்தோஷத்தை நாடின

---

* க்வின்ஸ், தான் கருதியதற்கு நேர் விரோதமான பொருள் தோன்றும்படி, முன்னுரையைப் பதங்களினிடையே தாறுமாறாய் நிறுத்திக் கூறுகிறான். அவன் கருதியது இது:—நாங்கள் செய்வது அபசாரமென்னின், நாங்கள் வருவது அவ்வெண்ணத்தோடன்று. எங்களுக்குள்ள அற்பத் திறமையைக்காட்ட ஆவலோடு வருவோம். எங்கள் உத்தேசம் அதுவே. யோசியுங்கள்; வருகிறோம். கெட்டவெண்ணத்தோடு வரவில்லை. நாங்கள் உங்களைத் திருப்திபடுத்தக் கருதி உங்கள் சந்தோஷத்தை நாடினவர்கள் இங்குவரவில்லை. உங்களை வருத்துவதற்கு. ஆட்டக்காரர்கள் இதோ இருக்கிறார்கள். அவர்களுடைய ஆட்டத்திலிருந்து நீங்கள் அறியக்கூடிய வற்றை அறிந்து கொள்ளலாம்.

‡ கூத்துத்தொடங்குமுன் அவை யடக்கமாக அரங்கத் துள்ளோரை நோக்கிச் சொல்லப்படுவது. முன்னுரை.

வர்கள் இங்கு வரவில்லை. உங்களை வருத்துவதற்கு ஆட்டக்காரர்கள் இதோ இருக்கிறார்கள். அவர்களுடைய ஆட்டத்திலிருந்து நீங்கள் அறியக்கூடியவற்றை அறிந்து கொள்ளலாம்.

தீஸியுஸ்:—இவன் நிறுத்த வேண்டிய விடத்து நிறுத்தாமல் தாறுமாறாய்ச் சொல்லுகிறான்.

லைஸாண்டர்.—முரட்டுக் குதிரைக்குட்டியை நடத்துவதுபோல அவன் இம்முன்னுரையை நடத்தினான்; நிறுத்தும் முறையே அறியான். இதிலிருந்து ஒரு நீதி விளங்குகின்றது: பேசுவது மாத்திரம் போதாது சரியாயும் பேசவேண்டும்.

ஹிப்பாலிடா:—உண்மையில், அவன் முன்னுரையை வாசித்தது குழந்தை புல்லாங்குழல் வாசிப்பதுபோலிருந்தது; ஒழுங்குபடுத்தப்படாத வெறுஞ் சத்தமே.

தீஸியுஸ்.—அவன் பேச்சு ஒரு பின்னற் சங்கிலிபோலிருந்தது. எங்கும் பழுதில்லை, ஆனால் எல்லாம் தாறுமாறு. அடுத்தவன் யார்?

[பிரமஸ் திஸ்பி, சுவர், நிலவு, சிங்கம் வருதல்.]

விவரஞ் சொல்வோன்:—குலமக்களே, இக்காட்சியைக்கண்டு நீங்கள் ஒருவேளை அதிசயிப்பீர்கள். எல்லாம் வெளியாகும் வரையில் உங்களுக்கு அதிசயமாகவேயிருக்கும். நீங்கள் அறிய விரும்புவீர்களாயின், இம்மனிதன் தான் பிரமஸ்; இவ்வழகுள்ளமாது திஸ்பி; சுண்ணாம்பும், மண்ணும் மணலுஞ்சேர்ந்த சாந்தும் பூசிக்கொண்டிருக்கும் இவன்தான் சுவர். இத்துஷ்டச்சுவர்தான் குறுக்கேநின்று காதலர்களைப் பிரித்து வைத்திருந்தது. இச்சுவரின் துவாரத்தின் வழியாக, ஐயோ! பாவம்! தங்கள் இரகசியங்களை ஒருவர் காதுக்குள் ஒருவர் ஓதித் திருப்தியடைந்திருந்தார்கள். இலாந்தரும், நாயும், ஒரு கட்டுச்சுள்ளியும் கொண்டிருக்கும் இவன் நிலவு; நிலவில் இக்காதலர்கள் நைனஸ்ஸின் ஸமாதி அருகில் யாதொரு குற்றமுமின்றிச் சந்தித்துத் தம் நேசத்தைப்பாராட்ட நிச்சயித்துக்கொண்டார்கள். சிங்கமென்று சொல்லப்படும் இப்பயங்கரமான மிருகமானது இரவில் முதலில் வந்த உண்மையுள்ள திஸ்பியை வெருட்டித்துரத்தியது. அவள் ஓடுகையில் தன் மேற்றுணியைக் கீழே நழுவவிட, அத்துணியைச் சிங்கம் தன் உதிரம் நிறைந்த வாயாற் கவ்விக்கறையாக்கிற்று. உடனே தைரியமுள்ள இனிய வாலிபனான பிரமஸ் அங்கு வந்து தன் அன்புள்ள திஸ்பியின் மேற்றுணியைக் கண்டு அவள் இறந்தாளென்று நிச்சயித்து உடைவாளையுருவித் தன் மார்பைப்பிளந்து கொதிக்கும் இரத்தத்தை வெளியாக்கினான். பின்னர் முசுக்கட்டைச் செடி மறைவில் நின்ற திஸ்பி அப்பால் வந்து அவனைக்கண்டு அவன் மார்பினின்றும் வாளைப்பிடுங்கித் தன்னுயிரை மாய்த்துக்கொண்டாள். இனி மற்றவைகளைப்பற்றிச் சிங்கமும், நிலவும், சுவரும், இரண்டு காதலர்களும் உங்கள் முன் வந்து எல்லாவிவரமும் சொல்லுவார்கள். (விவரஞ்சொல்லுபவன், திஸ்பி சிங்கம், நிலவுபோதல்.)

தீஸியுஸ்:—சிங்கமும்பேசுகிறதானால் அதிசயமாயிருக்கும்.

டெமிட்ரியஸ்:—அதிசயம் ஒன்றுமில்லை, என்னாண்டவனே! கழுதையில் அநேகம் பேசுமானால் சிங்கத்தில் ஒன்று பேசாதோ?

சுவர்:—இக்கூத்தில், ஸ்நௌட் என்று பெயருள்ள என்னுடைய பங்குக்குச் சுவர்வேஷம் வாய்த்தது. நான் துவாரமுள்ள சுவரென்றும் அத்துவாரத்தின் வழியாகப் பிரமஸ்ஸும் திஸ்பியும் தங்கள் அந்தரங்கங்களைப்பேசிக்கொண்டுவந்தார்களென்றும் பாவித்துக்கொள்ளும்படி உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். இச்சுண்ணாம்பும், கல்லும், மண்ணும் மணலுஞ் சேர்ந்த சாந்தும், நான் சுவரென்பதைச்செவ்வையாய்க் காட்டுகின்றன; இத்துவாரத்தின் இருபுறமும் பாருங்கள். இதன் வழியாகத்தான் பயந்த அக்காதலர்கள் தம் இரகசியங்களைப் பேசிக்கொண்டுவந்தார்கள்.

தீஸியுஸ்:—சுண்ணாம்பும் மயிரும் இதிலும் செவ்வையாகப் பேசுமோ?

டெமிட்ரியஸ்.—இது வெகு விசித்திரமான சுவர். இப்படிச்சுவர் பேசக் கேட்டதேயில்லை.

தீஸியுஸ்.—பிரமஸ் சுவரினருகில் வருகிறான்; பேசாதிருங்கள்.

பிரமஸ்.—ஓ, பயங்கரமான இரவே, ஓ! மைபோல் இருண்ட இரவே, பகலில்லாத காலத்துத் தோன்றுமிரவே! ஓ இரவே, எனது திஸ்பி தான்சொன்னதை மறந்துவிட்டாள்போல் தோற்றுகிறதே. ஓ சுவரே, அவள் தந்தையின் நிலத்திற்கும் என்னிலத்திற்கும் இடையேயுள்ள இனிய சுவரே, காண்போர் காதலிக்குஞ்சுவரே, உன் துவாரத்தைக்காட்டு, நான் எட்டிப்பார்க்கிறேன். (சுவர் இரண்டு விரல்களை உயர்த்தித் துவாரம்போற் காட்டல்.) மரியாதையுள்ள சுவரே, இந்நன்றியை மறவேன். இதற்கு உன்னை வருணபகவான் காப்பாற்றுவாராக. ஆ! நான்பார்ப்பது என்ன? என் திஸ்பியைக்காணேனே. ஓ! துஷ்டச்சுவரே, உன் வழியாய் என் இன்பத்தைக்காணேன். என்னை இவ்வாறு மோசஞ் செய்ததற்கு உன் கல் நாசமுறுவதாக.

தீஸியுஸ்.—இச்சுவர் அறிவுள்ளதாகையால் திருப்பித்திட்டுமென்று தோற்றுகிறது.

**பிரமஸ்.**—ஐயா, அப்படித்திட்டாது. "மோசஞ் செய்ததற்கு உன் கல் நாசமுறுவதாக" என்பது திஸ்பியின் *இறுதிச்சொற்குறிப்பு. இப்பொழுதுஅவள் வருவாள்; நான் சுவரின்வழியாய் அவளைப்பார்ப்பேன். எல்லாம் நான் சொல்லியபடியே நேரும்; பாருங்கள். அதோ அவள் வருகிறாள்.

**திஸ்பி.**—ஓ சுவரே, என்னழகுள்ள பிரமஸ்ஸையும் என்னையும் இவ்வாறு பிரித்திருப்பதற்கு என்ன மூக்கையை எத்தனையோ முறை கேட்டிருக்கிறாய். மயிராலும் சுண்ணும்பாலும் சேர்க்கப்பட்ட உன்னுடைய கற்களை என்னுடைய சிவந்த உதடுகள் எத்தனையோ முறை முத்தமிட்டிருக்கின்றன.

**பிரமஸ்.**—ஒரு சத்தத்தைப் பார்க்கிறேன். நான் இப்பொழுது துவாரத்தின்அருகிற்போய்த்திஸ்பியின் முகத்தைக் கேட்கக் கூடுமோ வென்று அறிகிறேன்.

**திஸ்பி.**—நீ என் காதலனோ? காதலன்தானென்று எண்ணுகிறேன்.

**பிரமஸ்.**—நீ எவ்வாறு எண்ணினும் நான் உன்னழகுள்ள காதலனே †விமாண்டரைப்போல் உறுதியுள்ள காதலன்.

**திஸ்பி.**—நானும் ஹெலனைப்போல் உண்மையான அன்புள்ளவள்.

**திஸ்பி.**—இவ்விழிந்த சுவரின் துவாரத்தின் வழியாக எனக்கு ஒரு முத்தங்கொடு.

**திஸ்பி.**—நான் சுவரின் துவாரத்தை முத்தமிடுகிறேன் உன் உதட்டில். முத்தங் கொடுக்கவில்லை.

**பிரமஸ்.**—நீ இப்பொழுது என்னை நைனஸ்ஸின் ஸமாதி அருகிற் சந்திப்பாயா?

**திஸ்பி.**—உயிர் இருக்குமோ போகுமோ, எவ்விதத்திலும் நான் உடனே வருவேன்.

(பிரமஸ்ஸும் திஸ்பியும் போதல்.)

**சுவர்.**—சுவராகிய என் காரியம் ஆய்விட்டது. ஆதலால் சுவர் போகிறேன். (போதல்.)

* நாடகத்தில் ஒவ்வொருவனும் முந்திப் பேசுபவன் பேச்சின் இறுதிச்சொல்லைத் தான் பேசத்தொடங்குவற்கு ஒரு குறிப்பாக ஞாபகத்தில் வைத்துக்கொள்வது வழக்கம்.

† விமாண்டர்...ஹெலன்.—பிரமஸ்ஸும் திஸ்பியும் லியாண்டர், ஹீரோ என்ற பெயர்களைத்தப்பாய் விமாண்டர் ஹெலன் என்று கூறுகிறார்கள். லியாண்டர் என்பவன் தன் காதலியாகிய ஹீரோவைக் காணவேண்டி. இரவுதோறும் சமுத்திரக் கால்வாயை நீந்திச்செல்வதுவழக்கமாயிருந்தது. அவ்வாறு நீந்துகையில் ஒருநாளிரவில் நீரில் மூழ்கி இறந்துவிட்டான். அதையறிந்து ஹீரோவும் கடலில் குதித்துவிட்டாள்.

**தீஸியுஸ்.**—அடுத் திருந்தவர்களைப் பிரித்திருந்த சுவர் இடிந்து போயிற்று.

**டெமிட்ரியஸ்.**—சுவர் இப்படி ஒட்டுக்கேட்குமானால் அப்படியிடிக்காமல் தீராது, என்னாண்டவனே.

**ஹிப்பாலிடா.**—இத்தனை பைத்திய முள்ளதை நான் எங்குங் கேட்டதில்லை.

**தீஸியுஸ்.**—நாடகங்களில் மிகச் சிறந்த வேடமும் முடிவில் வெறுந் தோற்றந்தானே. மிக இழிந்ததும் கற்பித சக்தியால் தன் குறை நீங்கப்பெற்று, வெறுந் தோற்றத்திலும் இழிந்ததாக ஆகாது.

**ஹிப்பாலிடா.**—உம்முடைய கற்பித சக்தியால் அப்படி யாகவேண்டுமேயன்றி அவர்களுடைய கற்பிதசக்தியாலன்று.

**தீஸியுஸ்.**—அவர்கள் தம்மைப்பற்றி எண்ணுவதிலும் இழிவாக நாம் அவரைப்பற்றி எண்ணாதபடி, நம் கற்பிதசக்தியை அவர்களிடத்து உபயோகப்படுத்தினாலே போதும். அப்பொழுது அவர்கள் சிறந்தவர்களாகவே காணப்படுவார்கள். மனித உருவத்திலும் சிங்க உருவத்திலும் இதோ இரண்டு சிறந்த மிருகங்கள் வருகின்றன.

[சிங்கமும் நிலவும் வருதல்]

**சிங்கம்.**—தரையில் ஊரும் மிகச்சிறிய சுண்டெலியைக்கண்டும் பயப்படும் படியான மெல்லிய குலமாதர்காள், சிங்கம் கோபத்தோடு கர்ஜிக்கும் பொழுது ஒருவேளை மிக நடுங்குவீர்கள். அப்பொழுது மூட்டுவேலைக்காரனாகிய நான்தான் அக்கொடிய சிங்க வடிவங்கொண்டு வந்திருக்கிறே னென்றும், வேறு சிங்கமில்லையென்றும் நினைத்துக்கொள்ளுங்கள். என்னைச் சிங்கமென்று நினைப்பீராயின் அதைவிட எனக்கு வேறு துக்கமில்லை.

**தீஸியுஸ்.**—வெகு சாதுவான மிருகம்; நல்ல பகுத்தறிவுடையது.

**டெமிட்ரியஸ்.**—நான் கண்டவற்றுள் இவ்வளவு நல்ல மிருகம் எங்குமில்லை.

**லைஸாண்டர்.**—இச்சிங்கம் சௌரியத்தில் பிரத்தியக்ஷ †நரி.

**தீஸியுஸ்.**—உண்மையே; விவேகத்திலோ, சாட்சாத் வாத்து. நன்று; சந்திரன் சொல்வதைக்கேட்போம்.

† நரி-மிக்க தந்திரமுள்ளது; சௌரியமேயில்லாதது. வாத்து மௌட்டியத்திற் பெயர்போனது.

சந்திரன்.—இந்த 'லாந்தர்' கோடுடைய பிறை.

டேமிட்ரியஸ்.—அப்படியாயின், அவன் தன்*தலையிற் கொம்பைத் தரிக்கவேண்டும்.

தீஸியுஸ்.—அவன் இளம்பிறையல்லன்; பூரண சந்திரனாதலின் அவன் கொம்புகள் மண்டலத்துள் மறைந்திருக்கின்றன.

சந்திரன்.—இந்த 'லாந்தரை'க் கோடுடைய சந்திரனாகவும் என்னை அச்சந்திரனிலுள்ள மனிதனாகவும் கொள்ளல் வேண்டும்.

தீஸியுஸ்.—எல்லாவற்றிலும் முதிர்ந்த பைத்தியமிது. இந்த லாந்தருள் இம்மனிதனை அடைக்கவேண்டும். அஃதில்லையாயின், இவன் சந்திரனிலுள்ள மனிதனாவதெப்படி?

டேமிட்ரியஸ்.—மெழுகுதிரி முற்றும் எரிந்து விட்டதால், அம்மெழுகுதிரி தன்னை யெரிக்குமெனப்பயந்து அவன் லாந்தருள் நுழையத் துணியவில்லை.

ஹிப்பாலிடா.—இந்தச்சந்திரனைக்கண்டதுபோதும்; வெறுப்புற்றேன். வேஷம் மாறினால் நலமாயிருக்குமே.

தீஸியுஸ்.—தேய்பிறையின் சிற்றொளியையுடைய இவன் போகுந்தருணம் வருகின்றது. ஆயினும் மரியாதைக்கு குறித்தகாலம் வரும்வரையிற் பொறுப்போமே.

லைஸாண்டர்.—சந்திரனே, மேற்சொல்லுவதைச் சொல்லலாம்.

சந்திரன்.—நான் சொல்வது இதுவே, இந்த லாந்தர் சந்திரன்; நான் அதிலுள்ள மனிதன்; இச்சுள்ளிக்கட்டு என்னுடைய சுள்ளிக்கட்டே, இந்நாய்எனது நாயே.

டேமிட்ரியஸ்.—இவையெல்லாம் சந்திரனுள் இருப்பனவாதலால், லாந்தரினுள்ளும் இருக்கவேண்டும். சும்மா இருங்கள்! இதோ திஸ்பி வருகிறாள்.

திஸ்பி.—இதுதான் நைனஸ்ஸின் ஸமாதி. என் காதலன் எங்கே?

சிங்கம். (கர்ஜித்தல்) ஓ— (திஸ்பி ஓடுதல்.)

டேமிட்ரியஸ்.—சிங்கம், நல்ல கர்ஜனை.

தீஸியுஸ்.—திஸ்பி, நல்ல ஓட்டம்.

ஹிப்பாலிடா.—சந்திரனே, நல்ல பிரகாசம், உண்மையிற் சந்திரன் அழகாய்ப் பிரகாசிக்கின்றது.

(சிங்கம் திஸ்பியின் மேற்றுணியை வாயாற் கவ்வி உதறி யெறிந்து ஓடுகின்றது.)

தீஸியுஸ்.—சிங்கம், எலியை உதறுவதுபோல் நல்ல உதறல்.

லைஸாண்டர்.—சிங்கம் போய்விட்டது.

டேமிட்ரியஸ்.—இதோ பிரமஸ் வந்தான்,

[பிரமஸ் பின்னும் வருதல்.]

பிரமஸ்,—இனிய சந்திரனே, உனது வெயிலைக் கண்டு நிரம்பச் சந்தோஷிக்கிறேன்; அழகு நிறைந்து பொன்னிறமாய் ஒளிவீசும் உனது சோபையால் என்னுண்மையுள்ள திஸ்பியின் உருவத்தைக் காண எண்ணுகிறேன். நில்; ஆ! கொடுமை! அடா, ஏழை ஆயுதபாணியே, இப்பெருந்துக்கத்தை உற்றுப்பார். ஐயோ கண்களே, நீர் பார்க்கின்றீரோ? இஃது எவ்விதமாய் இருக்கக்கூடும்? ஆ! என்னழகியதாராவே, ஓ என்னரும்பொருளே, இஃது உனது மேற்றுணியன்றோ? என்ன! இரத்தக்கறை பட்டிருக்கிறதே, ஓ! பயங்கரமான காலபுருஷர்காள், வாருங்கள்; காலஅதிதேவதைகாள் வாருங்கள்; என்னுயிரை வாங்குங்கள், நசுக்குங்கள்; நாசமாக்குங்கள்; எல்லாவற்றையும் முடித்து ஒய்வுற்றிருக்கச் செய்யுங்கள்.

தீஸியுஸ்.—ஒருவனுக்கு அருமைத்தோழன் இறந்திருந்தால் மட்டும், இவன் காட்டும் வருத்தப்பாவனை ஒருவேளை அவனுக்குத் துக்கத்தை யுண்டாக்கலாம்.

ஹிப்பாலிடா.—உண்மையில் எனக்கு அவனைக் காண்பதிற் பரிதாபமுண்டாகின்றது.

பிரமஸ்.—ஓ கடவுளே, சிங்கத்தை ஏன் படைத்தாய்? அவ்விழிந்த மிருகம் எனது அரிய நறுமலரைக்கொய்துவிட்டதே. விருப்பமும் அன்பும் முகமலர்ச்சியுமுள்ள மாதருள் அவள் பேரழகுடையவளாய் வாழ்கின்றவள். இல்லை, இல்லை வாழ்ந்தவள். நான் கண்ணீர்பெருகி இறவேனோ? ஓ! வாளே, இரத்தாசயம் துள்ளிக்குதிக்கும் பிரமஸ்ஸின் இடமார்பைப் பிளப்பாயாக. (தன்னைத்தான் குத்திப்பிளந்து சொன்னல்.) நானிதோ சாகிறேன்; இறந்தேன், பறந்து போய்விட்டேன்; என் ஆத்மா இப்பொழுது ஆகாயத்திலிருக்கின்றது. *நாவே உன் ஒளியை இழப்பாயாக, சந்திரனே நீ ஓட்டம் பிடிப்பாயாக. (சந்திரன் போதல்.) நான் சாகிறேன், சாகிறேன், சாகிறேன், (சாதல்.)

தீஸியுஸ்.—இரணவைத்தியன் உதவியால் அவன் இப்பொழுதும் பிழைக்கக்கூடும்.

---

* கற்பிழந்த மனைவியையுடையவனைத் தலையிற் கொம்புடையனென்று சொல்வதுண்டு.

* நாவே என்றிருப்பது இவ்விடத்தில் முற்றிலும் அசம்பந்தமென்றும் அதற்குப்பிரதியாகச் சூரியனே என்றிருந்தால் வேடிக்கையாக இருக்குமென்றும் ஒருவர் சொல்லுகிறார்.

ஹிப்பாலிடா.—திஸ்பி திரும்பிவந்து தன் காதலனைத் தேடிப்பார்க்குமுன் சந்திரன் மறைந்துவிட்டதே.

தீஸியுஸ்.—அவள் அவனை நட்சத்திரப் பிரகாசத்தால் கண்டுகொள்வாள். இதோ அவள் வருகிறாள்: அவளுடைய துக்கத்தோடு கூத்து முடியும்.

[திஸ்பி இன்னுமொருமுறை வருதல்.]

ஹிப்பாலிடா.—அவள் இந்தப் பிரமஸ்ஸின்பொருட்டுத் தன் பிரலாபத்தை அதிகமாய் நீட்டாமற் குறுக்குவாளென்றெண்ணுகிறேன்.

டேமிட்ரியஸ்.—இருவரும் தராசுமுளையாய் நிற்பார்கள். ஒருவருக்கொருவர் தாழ்விலர். அவனைப் புருஷனாகவும் இவளைப் பெண்ணாகவும் நாம் நினைப்பதற்குக் கடவுள் தான் நம்மைக்காப்பாற்ற வேண்டும்.

லைஸாண்டர்.—அவள் தன் இனிய கண்களால் அவனைக்கண்டு கொண்டாள்.

டேமிட்ரியஸ்.—இதோ அவள் பிரலாபிக்கத்தொடங்குகிறாள்.

திஸ்பி.—என் நேசமே, உறங்குகிறாயோ? ஓ! பிரமஸ்ஸே, எழுந்திரு. பேசு; பேசு; முற்றும் ஊமையானாயோ? இறந்தாயோ? உன் இனிய கண்களை மூடுவதற்கு ஒரு சமாதி சமைக்கவேண்டும். உன் வெள்ளுதடும், செம்மூக்கும், மஞ்சட்கன்னமும்போயினவே. காதலர்காள், கதறுங்கள். ஆ! ஆ! அவன் கண்கள் வெண்காயம்போல் பைந்நிறமாயிருந்தனவே. காலாந்தகிகாள், [illegible]வன் சீட்டைக்கிழித்தீரோ? என்னருகில் வாரும்; பால்போலும் வெளுத்த உமது கையை என்னுதிரத்தில் நனையும். ஓ! நாவே, நீபேசாதே. உறுதியுள்ள கத்தியே, நீ வா; என்மார்பை இரத்தமாக்கு. (தன்னைத்தான் குத்திக்கொள்ளல்.) திஸ்பி முடிகிறாள்; போய்வருகிறேன். நண்பர்களே, நன்மையுண்டாவதாக. (இறத்தல்.)

தீஸியுஸ்.—சந்திரனும் சிங்கமும் இறந்தவர்களை அடக்கஞ்செய்ய இருக்கின்றன.

டேமிட்ரியஸ்.—ஆம்; சுவரும் அதற்காகவே இருக்கிறது.

பாட்டம்.—(எழுந்து நின்று) இல்லை, இல்லை. அவர்கள்டைய நிலங்களுக்குக் குறுக்கே நின்றசுவர் அப்பொழுதே போய்விட்டது. எங்கள் கூத்தின் பின்னுரையைப் பார்க்கவேனும், எங்களுள் இருவர் சேர்ந்தாடும் குறக்கூத்தைப் பார்க்கவேனும் விருப்பமிருக்குமோ?

தீஸியுஸ்.—உங்கள் கூத்துக்குப் பின்னுரையே வேண்டுவதில்லை, அதிலுள்ள குறைகளைப்பற்றி உபசாரஞ்சொல்ல ஆவசியகமில்லை. ஆட்டக்காரர் எல்லோரும் இறந்தபின் யார்மேற்குற்றஞ்சொல்லுகிறது. இக்கூத்தையெழுதினோன் பிரமஸ்வேஷம் போட்டுத்திஸ்பியின் முழந்தாட் கச்சால் தன்னைத் தூக்கிக்கொண்டு இறந்திருந்தால் இதுநல்ல துக்கக்கூத்தாய் முடிந்திருக்கும்; உங்கள் பின்னுரை வேண்டுவதில்லை; குறக்கூத்தாட்டம் காண்போம். (ஆடுதல்.) அர்த்தஜாமமணி அடித்தாயிற்று; காதலர்கள் தத்தம் பள்ளியறையடையலாம். இது கந்தர்வர்களின் சஞ்சாரகாலம், இரவில் இதுவரையில் நாம் விழித்ததினால் விடிந்தபின்பு நெடுநேரவரையில் உறங்குவோமென்று தோற்றுகிறது. இவ்வசம்பந்தக்கூத்துநமக்கு இரவில் இதுவரையில் நல்ல பொழுதுபோக்காயிருந்தது. இனிய தோழர்களே, படுத்துக்கொள்ளுங்கள். இப்படியே நாம் இப்பக்ஷம் முழுவதும் விருந்தும் கூத்துமாய்க் காலம் போக்குவோம். (போதல்)

[பக்-வருதல்.]

பக்.—இப்பொழுது பசியால் வருந்தும் சிங்கம் கர்ஜிக்கின்றது. சந்திரனை நோக்கி ஓநாய் ஊளையிடுகின்றது. உடல்கனத்த உழவனோ, கடிய வேலைசெய்து களைத்து உறங்கிக் குறட்டைவிடுகின்றான். இங்கு எரிந்த கணப்புக்கட்டைகள் கனலுந்தழல்களாயிருக்கின்றன. சாகுருவியோ, உரக்கக் கத்தி நோயால் வருந்துபவனுக்கு *முகவாஸத்தை நினைப்பூட்டுகின்றது. கல்லறைகள் வாய்திறக்க அவற்றினின்றும் பேய்கள் புறப்பட்டு மயானத்து மெல்ல நடக்கும் சமயமிது. சூரியன்முன் நில்லாமல் கனவைப்போல் இருட்டைத்தொடர்ந்து சந்திரனுடைய இரதத்தோடு ஓடிச்செல்லும் கந்தர்வர்களாகிய நாமோ, இப்பொழுது களிகூர்ந்திருக்கிறோம். இப்பரிசுத்தமான இடத்தில் சுண்டெலிகூட இனி உலாவுதல்கூடாது. குப்பையைக் கதவின்மூலையினின்றும் கூட்டி ஒதுக்கி இவ்விடத்தைச் சுத்தியாக்கஎன்னைவிளக்குமாறுங்கையுமாய் இங்கு முன்னுற அனுப்பியிருக்கிறார்கள்.

[ஓபரானும், டிடேனியாவும், பரிவாரங்களுடன் வருதல்.]

ஓபரான்.—இங்குத் தணலாயிருக்கும் நெருப்பை எரிய விட்டு வீடெங்கும் பிரகாசமுண்டாக்குக. செடியினின்றும் பறவை தத்திவருவதுபோற் கந்தர்வர்காள் நீங்களும் இங்குத்துள்ளி விளையாடுங்கள். நான் பாடும் இப்பாட்டை என்னுடன் பாடிக் குதித்தாடுங்கள்.

* முகவாஸம் என்பதை முகவாசை என்றும் முகத்தீடு என்றும் சிற்சிலர் வழங்குகிறார்கள்; இது பிரேதத்தின்மேற் போடப்படும் துணி.

டிடேனியா,—ஒவ்வொரு பதத்திற்குமுரிய சுரத்தோடு தமது பாட்டுக்களை ஒருமுறை முதலில் பாடிக்காட்டும்; நாங்களும் அதன்படி பாடுவோம்; கைகோத்தாடுவோம்; எங்கள் காந்தர்வ சிங்காரநடனத்தால் இவ்விடத்தைப் புனிதமாக்குவோம்.

(பாட்டும், ஆட்டமும்.)

ஓபரான்.—பொழுது புலருமளவும் கந்தர்வர்கள் யாவரும் இவ்வரண்மனையிடத்தே உலவித் திரியவேண்டும், நாமிருவரும் அரசன் பள்ளியறையை அடைந்து அரசனரசிகளை வாழ்த்துவோம்; அவர் பெறும் நன்மக்கள் குறையாச் செல்வத்து வாழ்வாராக. அவ்வாறே மூன்று தம்பதிகளும் தம்முள் ஒருநாளும் பிரியாது மனமொத்திருப்பாராக. அவரது நன்மக்களும் உருவத்து வடுவின்றி அவக்குறிகளொன்றுமின்றி மகிழ்வுறுக. இப்பனித்துளியின் புரோக்ஷணையாற் கந்தர்வர் யாவரும் பரிசுத்தராய்ச் சென்றுஇவ்வரண்மனையின் ஒவ்வொரு மாடமண்டபத்துக்கும் சாந்திசெய்து வருவாராக. இவ்வரண்மனையாளுவோன் தெய்வ அருள் பெற்று இனிதுவாழ்வானாக; இனி நிற்கவேண்டுவதில்லை; யாவரும் போகலாம். விடியற்காலையில் எல்லோரும் என்னை வந்துகாணுங்கள். (ஓபரான், டிடேனியா, பரிவாரங்கள் போதல்.)

பக்.—கந்தர்வர்களாகிய நாங்கள் உங்களுக்குத் தவறிழைத்தோமாயின், நீங்கள் இதுவரையில் இங்கு உறங்கினீர்களென்றும், இங்கு கண்டனவெல்லாம் அவ்வுறக்கத்தில் உங்களுக்குண்டாய தோற்றமென்றும் கருதுக; அப்பொழுது தவறிழைத்தோமென்ற வருத்தம் மாறிவிடும். குலமக்காள், நாங்களியற்றிய இச்சிறு காரியம் கனவைப்போற் பயனிலதென்றெண்ணி எங்களிடத்துக் கடுமை பாராட்டாது இம்முறை பொறுத்தருள்வீராயின், நாங்கள் இனிச் செய்வனவற்றைத் திருந்தச்செய்து உங்களை மகிழ்விக்க முயல்வோம். நான் உண்மையுள்ள பேய் என்பது மெய்யானால், நீங்கள் இப்பொழுது எங்களைச் சீறுது ஒழிவதற்கு நாங்கள் விரைவில் உங்களுக்குத் தக்க கைம்மாறு உதவுவோம். உங்கள் முன் இன்னுமொரு முறைதோன்றிச் செவ்விதா யாடி உங்களைமனமகிழ்விப்போம். இது தவறுமேல் பக்கைப் பொய்யனென்று அழையுங்கள். நன்று; எல்லோர்க்கும் வந்தனம்; நான் போய்வருகிறேன். எம்மிடத்து வெறுப்பின்றி விருப்பமுடையீராயின் அதை மெய்ப்பிக்க இப்பொழுது என்முன் கைகொட்டிக் களியுங்கள். ராபின் இந்நன்றி மறவாது தக்க கைம்மாறு உதவுவான்,

(முற்றிற்று.)

ஏஸ். நாராயணஸ்வாமி அய்யர், பி. ஏ.

## குடித்தனம் பண்ணுகிற மூன்று விதங்கள்.

2-வது, வரும்படிக்குச் சரியான செலவுசெய்கிறது.

---

(345-வது பக்கத்தொடர்ச்சி முடிவு.)

சத்தியவதிக்கு இப்படி வேலைக்காரர்களால் நேரிட்ட தொந்திரவையுந்தவிர தன்புருஷனுடைய குணமும் முன்போலில்லாமல் கொஞ்சம் வேறுபட்டதினாலும் சிலவேளைகளில் வருத்த முண்டாயிற்று.

இப்படியிருக்க ஒரு நாள் சத்தியவதி "மாமா இவ்விடத்திற்கு வந்து எவ்வளவு நாளாகிறது" என்று தன்புருஷனைக் கேட்டாள்.

தர்மசீலன்.—"நாமிப்பொழுதிருக்கும் மேலான ஸ்திதியையறிந்து நம்மையெப்படிப் பார்க்கிறதென்று சங்கோசப்பட்டுக்கொண்டிருக்கிறார் போலிருக்கிறது. ஆகையால் தான் அவர் இதுவரையில் வரவில்லை" என்றான்.

சத்தியவதி.—"இல்லை, இல்லை அவருடைய குணமது வல்ல. நாம் அவருக்குச் சொல்லியனுப்பி இன்றைக்கு இவ்விடத்தில் தானே அவரை சாப்பிடச்சொன்னாலென்ன."

தர்மசீலன்.—"இன்றைக்குக் கூடாது. நான் என்னுடைய சிநேகிதர்களாகிய இரண்டு கனவான்களை நம்முடைய வீட்டில் சாப்பிட அழைத்திருக்கிறேன். ஆகையால் மாமாவுக்கு சௌகரியப்படாது."

சத்தியவதி.—"ஆனால் நாளையதினமவரை அழைப்போம்."

தர்மசீலன்.—"அப்படியே செய்; எனக்கு பூரண சம்மதம்" என்று சொல்லிவிட்டுத் தன்வேலைக்காரனை யழைத்துக்கொண்டு கடைக்குப் போய்விட்டான்.

சத்தியவதி சமையல் வேலை யெப்படியாகிறதென்றுபார்க்கச் சமையலறைக்குச்சென்றாள். இப்படிக்கு ஒவ்வொரு விருந்துக்கும் சத்தியவதி தன்னுடைய வேலைக்காரர்களிடத்தில் வெகு சங்கடப்பட்டு வேலை வாங்கிக்கொண்டு தானும் சிலவேளையில்வேலை செய்து வந்தாள். இப்பொழுது சமையலறையிலிருக்கும் பொழுது தெருக்கதவை யாரோ வெகு பலமாயிடிக்கக் கண்டு தன்னுடைய வேலைக்காரியை யனுப்பி ஒருவரையும் உள்ளே விடாமல் தான் வீட்டிலில்லையென்று சொல்லிவிடும்படி சொன்னாள். வேலைக்காரி சென்று கதவைத்திறந்தவுடனே யாரோஒருவன் அவள் தடுத்ததைக் கவனிக்காமல் உள்ளே வருவதைக் கண்டு, இப்படி வேலை செய்து கொண்டிருக்கும் பொழுது அகப்பட்டுக்கொண்டோமேயென்று வெகு வெட்க

மடைந்து சத்தியவதி தனக்கெதிரிலிருந்த வொரு அறையில் புகுந்து ஒளிந்துகொண்டாள். உள்ளேசென்ற பிறகு தன் மாமாவின் குரலைக்கேட்டாள்:

மாமா.—"அவள் வீட்டிலில்லை யென்பது நிச்சயந் தானா?"

வேலைக்காரி.—"ஆம் அய்யா, அவள்வெளியில் போகும்போது நான்பார்த்துக்கொண்டிருந்தேன்."

மாமா.—அவள் போய் எத்தனை நாழிகை யாகிறது?

வேலைக்காரி.—"ஒரு மணியிருக்கும்."

மாமா.—ஆனால் சீக்கிரம் வந்துவிடுவாள். நான் இங்கே யோசித்துக்கொண்டிருக்கிறேன்.

வேலைக்காரி.—அப்படியல்ல, சாப்பாட்டுவேளைவரையில் வரமாட்டேனென்று என் எசமானிசொல்லிவிட்டுப்போனாள்.

மாமா.—இதென்ன, இங்கே ராஜாக்கள் வந்து சாப்பிடப்போவதுபோல் சமையலாகியிருக்கிறதே?

வேலைக்காரி.—கொஞ்சம் சிரித்துக்கொண்டு "இல்லை இரண்டு, மூன்று சிநேகிதர்கள்தான்" என்றாள்.

இப்படியிவர்கள் பேசிக்கொண்டிருப்பதைக் கேட்ட சத்தியவதி பயத்தினால் இன்னது செய்கிறதென்று ஒன்றுந்தெரியாமல் திகைத்து நின்றாள். அவளுக்கு தன்னுடைய மாமாவின் சத்தியந்தவறாத குணங்களெல்லாம் நன்றாய்த் தெரியும். ஆகையால் வீட்டிலில்லை யென்றால் ஏதோ வேலையாயிருக்கிறாளென்று சிலர் வழக்கமாய் அர்த்தம்பண்ணிக்கொள்ளுவது போல அவர் செய்யமாட்டாரென்பது அவளுக்கு நன்றாய்த் தெரிந்தது. வேலைக்காரியோ கொஞ்சம் பொய்சொல்லும் படிதான் சொல்லியிருக்க அதிகப்பொய் சொல்லித்தன்னையு மப்பொய்க்குட் படுத்தி விட்டாள். ஆகையால் என்ன செய்கிறதென்று வெகுபயப்பட்டுக்கொண்டு சன்னல் வழியாய் வெளியே குதித்துப்போய்விடலாமா வென்று பார்த்தாள். ஆனால் சன்னல் வெகு உயரமாயிருந்தது. இப்படியிருக்க மாமா தன்பிரம்பை மூலையில் வைத்துவிட்டு அங்கிருந்தவொரு சன்னலில் உட்கார்ந்துகொண்டு வேலைக்காரியை தாகத்துக்குத் தண்ணீர் கொண்டு வரும்படி சொன்னார். சத்தியவதி கடைசியில் தான் சும்மா விருந்துவிட்டால் மாமா சீக்கிரத்தில் போய்விடுவாரென்று நினைத்துக்கொண்டிருக்கும்பொழுது, மாமா, அன்றைய தினத்தியப் பத்திரிகையைக் கேட்டு வாங்கிப்படிக்க ஆரம்பித்தார். என்ன செய்கிறது! சமையல் வேலைகளப்படியே நின்று போய் விட்டன. கடைக்குப்போன புருஷனும் சீக்கிரத்தில் வந்துவிடுவான்.

கடைசியில் மாமாவும் பத்திரிக்கை முழுமையும் ஒவ்வொரு எழுத்தாய் வாசித்து முடித்தார்; பிறகு வேலைக்காரியைக் கூப்பிட்டு தான் வந்துவிட்டு சத்தியவதியை பார்க்கமுடியாமல் போனதில் வெகுவருத்தப்பட்டதாக எஜமானியிடத்தில் சொல்லும்படி சொல்லிவிட்டுத் தற்செயலாய் சத்தியவதி ஒளிந்துகொண்டிருந்த அறைக்கதவைத் திறக்கப்போனார். உடனே வேலைக்காரி "அய்யா அய்யா, அதல்ல தேருக்கதவு" என்று சொல்வதற்கு முன்னே கதவுதிறந்து போய்விட்டது. மூலையில் ஆடெடுத்த கள்ளன் போல் விழித்துக்கொண்டு சத்தியவதி நின்றாள்: மாமா சற்றுநேரம் ஆச்சிரியத்தால் பிரமித்து நின்று, பிறகு வீட்டிலில்லை யென்றது, தன்னைப்பார்க்கஇஷ்டமில்லாததினால் தான் சத்தியவதியப்படிச் செய்திருக்க வேண்டுமென்று நினைத்து, ஒன்றும் பேசாமல் சத்தியவதியை நிமிர்ந்து பார்த்தார்.

சத்தியவதி.—மாமா, அறைக்குள் புகுந்து ஒளித்துக்கொண்ட பொழுது, நீங்கள் வந்திருக்கிறீர்களென்று எனக்குத்தெரியாது. வேறு யாரோ வென்று நினைத்துக்கொண்டிருந்தேன்.

மாமா.—"பேசாதே; ஏன் இன்னும் பொய் சொல்ல எத்தனிக்கிறாய்? நீ பொய்சொல்லுவது மல்லாமல் பேதையாகிய உன் வேலைக்காரிக்கும் பொய்சொல்ல கற்பித்தாயே. நான் இது வரையில் என் சொந்தக் குழந்தைபோல் பாவித்திருந்தேன். இனி இப்படி உனக்கு தொந்தரவு கொடுக்கிறதில்லை. வீட்டிலில்லை யென்று உன் மாமாவுக்கு சொல்லி எய்த்துவிடும் படியாக இனி ஒருபோதும் நேரிடாது" என்றுசொல்லிவிட்டு வீட்டுக்குப்போக எத்தனித்தார்.

சத்தியவதி உடனே.—"நீங்கள் போய்விடக்கூடாது மாமா, நான் சொல்லுவதைக் கொஞ்சம் கேட்கவேண்டும்."

மாமா.—போதும், போதும், எனக்காக இனி பொய் சொல்லவேண்டாம்.

சத்தியவதி.—ஆனால் என்னைவிட்டு விட்டுப்போய் விடுவதுசரியா? குழந்தையாயிருக்கும்பொழுது தாய் தகப்பனில்லாத தங்களுடைய சகோதரியின் ஒரே பெண்ணாகிய என்னை எடுத்து வெகு பிரியமாய் வளர்க்கவில்லையோ.

மாமா.—"அப்பொழுதெல்லாம் நீ தான் என்னுயிருக்குயிராயிருந்தாய். இப்பொழுது யாரிருக்கிறார்கள்? ஒருவருமில்லை." என்றுசொல்லி தன் துணியை யெடுத்துக் கண்ணை துடைத்துகொண்டார்.

சத்தியவதி.—நான் சொல்லுவதைக் கொஞ்சம் கேளுங்கள். வேறு யாராவது வந்து கூப்பிட்டால் தான் நான் வீட்டிலில்லையென்று சொல்லும்படி வேலைகாரிக்குச் சொல்லியிருந்தேன்.

மாமா.—(கோபத்துடனே) வீட்டிலிருந்து கொண்டேதானே இப்படி சொல்லச்சொன்னாய்.

சத்தியவதி.—எல்லோரும் இப்படித்தான் சொல்லுகிறார்கள். அதை ஒரு பொய்யாக நினைக்கிறதில்லையே. வீட்டிலில்லை யென்றால் அயலாரைப்பார்க்க நமக்கு சௌகரியப் படவில்லை. யென்றுதான் அருத்தம். அது எல்லாருக்கும் தெரியுமே.

மாமா.—"அறையில் ஒளிந்துகொண்டிருக்கிறாளென்பதும்எல்லோருக்கும்தெரிந்திருக்கவேண்டியது தானே" என்று சொல்லி கோபந்தணிந்துபோய் சிரிக்கத்தொடங்கி, "ஓ சத்தியவதி அக்கதவைதவறுதலாய் நான் திறந்தபொழுது உன் முகம் எவ்வளவு நன்றாயிருந்தது. நான் கதவைத்திறந்தது நல்லதுதான். நீ பொய்சொன்னதற்காக உனக்கு நல்ல தெண்டனை கிடைத்தது."

சத்தியவதி.—ஆம், மாமா, நான் இனி வீட்டிலிருக்கும்பொழுது இல்லையென்று சொல்லவே மாட்டேன்.

மாமா.—மறுபடியும் சிரித்துக்கொண்டு "நெல்லைத்தின்னப்போன எலியைப்போல மூலையில் பதுங்கிக்கொண்டிருந்தாயே. அதிக விஷமம் பண்ணும் சிறுகுழந்தைகளை அறையில் அடைத்து வைப்பதுபோல் நீயும் ஒருமணி நேரம் அடைபட்டிருந்தா யல்லவா".

சத்தியவதி.—என்னுயிருள்ளமட்டும் இதை நினைக்க எனக்கு வெட்கமுண்டாகும்.

மாமா.—பொய் சொன்னால் அப்படித்தான் வெட்கப்படுவாய்.

சத்தியவதி.—ஒருவரும் அதைப் பொய் யென்று நினைக்கிறதில்லை. நாம் வேலையா யிருக்கிறோமென்றும் பிறரைப்பார்க்க முடியா தென்றும் தான் அதர்க்கருத்தம்.

மாமா.—அப்படியானால் அப்பொழுதே என் அப்படிச்சொல்லியிருக்கக் கூடாது. வேலைக்காரி நீ வெளியில் போயிருக்கிற தாகவும் சாப்பாட்டு வேளை வரையில் நீ திரும்பி வரமாட்டா யென்றும் சொன்னாளே.

சத்தியவதி.—அது அவளுடைய சொந்த கைச்சரக்கு. நான்வீட்டிலில்லையென்று சொல்லச்சொன்னேனே தவிர வேறொன்றுஞ் சொல்லவில்லை.

மாமா.—ஆனால் அவள் பொய்சொன்னாளென்று நீ ஒப்புக்கொள்ளுகிறாயோ.

சத்தியவதி.—தடையில்லாமல் ஒப்புக் கொள்ளுகிறேன்.

மாமா.—வீட்டிலில்லையென்று சொல்லுவதைப் பார்க்கிலும் கொஞ்சம் அதிகப்பொய்யையும் சேர்த்துச் சொல்லுவது பிசகென்று வேலைக்காரிக்குத்தெரியுமோ. பொய் சொன்னாலென்ன? அதிகப்பொய் சொன்னாலென்ன, எல்லாம் சரிதான்.

இப்படி தன்னுடைய மாமாவை சமாதானப்படுத்த முடியாதென்றறிந்து சத்தியவதி தன்மே லெப்பொழுதும் போலவே பிரியமா யிருக்கவேண்டுமென்று அவரைக் கேட்டுக்கொண்டாள். கிழவருக்கும் தன் கோபம் தணிந்துவிட்டபடியால் "நீ என்னிடத்தில் செய்த தப்பிதத்திற்கு உன்னை மன்னித்து விடுகிறேன். ஆனால் நீ பொய்சொன்ன தப்பிதத்திற்கு சுவாமியைப் பிரார்த்தித்து மன்னிப்புக் கேட்டுக்கொள்ள வேண்டுமே தவிர என்னைக்கேட்பது பிரயோஜனமில்லை" என்று கடுமையாய்ச்சொன்னார்.

பிறகு மாமா வீட்டுக்குப்போக எத்தனித்தவுடனே சத்தியவதி அவரைத் தடுத்து தன் வீட்டில் சாப்பிட வேண்டுமென்று கேட்டுக்கொண்டாள். "தங்கள் வீடு வெகுதூர மிருக்கின்றதே. இப்பொழுது நீங்கள்போகக்கூடாது. நாங்களும் நாளைதினம் தங்களைச் சாப்பாட்டுக்கு அழைக்கிறதாகத் தான் நினைத் திருந்தோம். தாங்கள் இப்பொழுது இங்கே சாப்பிடச் சம்மதியாவிட்டால் என்னை நீங்கள் மன்னிக்கவில்லையென்று நினைப்பேன்" என்றாள். மாமாவும் கடைசியில் சம்மதித்தவுடனே சத்தியவதிக்கு மனதிலிருந்த பெரியபாரம் நீங்கினாற்போல நீங்கி உடனே வேறொரு அரைக்கு அவரை யழைத்துக்கொண்டுபோய் கையிலகப்பட்ட பத்திரிகைகளை யெல்லாம் எடுத்து அவருக்குக்கொடுத்து உட்காரவைத்துவிட்டு சந்தோஷத்துடனே சமையல் வேலைகளைப் பார்க்கப்போனாள். கடைக்குப்போன தர்மசீலன் திரும்பி வந்தவுடனே மாமாவைக்கண்டு வெகு சந்தோஷமடைந்தான். அவனோடு கூடவந்த விருந்தாடிகளும் மிகவும் புத்திசாலிகளானபடியால் மாமாவுடைய குணத்தைப்பார்த்து வெகு சந்தோஷமடைந்தார்கள். மாமா கொஞ்சங்கூட பயமில்லாமலும் கர்வமில்லாமலும் பேசினதுமன்றி தன்க்குத்தெரியாத விஷயங்களை தெரியாதென்று ஒப்புக்கொள்ள வெட்கப் படவில்லை. இவர்கள் பேசிக் கொண்டிருந்ததை கவனித்துச் சந்தோஷ மடைய சத்தியவதிக்கு கொஞ்சங்கூட அவகாசமில்லை. ஏனென்றால் தன்னுடைய புதிதாய் வந்த வேலைக்காரனுக்கு எதை எப்படி பரிமாறுகிறதென்று தெரியாததினால் அடிக்கடி அவனுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டியதா யிருந்தது. சமையலும் நன்றாயிராமல் வெகு கெடுதலா யிருந்தது. கடைசியில் சாப்பிட்டு முடிந்தவுடனே மாமா சத்தியவதியைக் கூப்பிட்டுக் குழந்தைகளைப் பார்க்கப்போவோம் வா என்றார். அப்படியே சென்றவுடனே குழந்தைகள் ஒன்றுக்கொன்று ஆகாரத்துக்காக சண்டைபோட்டுக் கொண்டிருந்ததைக்கண்டு, சத்தியவதியை தனிமையில் இட்டுக்கொண்டுபோய்ச் சொல்லுகிறார்: "இப்படியுட்கார்ந்துகொண்டு நான் சொல்வதைக் கவனமாய்க் கேள். நான் உனக்குக் கலியாணமாவதற்கு முந்தி நீ தருமசீலனுக்குவாழ்க்கைப்படுவதைப்பத்தியாக்ஷேபித்தேனல்லவா. அப்பொழுது தருமசீலனுக்கு ஒரு குடித்தனத்தை வைத்து இரட்சிக்கத் திறமை

யில்லை யென்று நினைத்தேன். ஆனால் பிறகு நான் நினைத்தது பிசகென்று தெரிந்தது. நீங்கள் சுகமாயிருப்பதோடுங்கூட வெகு நல்ல ஸ்திதியிலுமிருக்கிறீர்கள். ஆனால் உங்களுக்கு இது வரை யதிகச்செலவில்லாமல் குடித்தனம் நடந்து வந்தது. இப்போது நீங்கள் செய்யும் செலவைப்பார்க்க எனக்கு வெகு சந்தேகமுண்டாகிறது. இருந்தபோதிலும் உங்களுடைய விஷயம் உங்களுக்கே நன்றாய்த் தெரியுமாதலால்தான் அதுவிஷயத்திலொன்றுஞ் சொல்லவேண்டியதில்லை யென்றெண்ணிச் சில காலமாய்ச் சும்மாவிருந்து விட்டேன். நீங்களிம்மாதிரியேகுடித்தனஞ் செய்யும் விஷயத்தில் பிறகென்னது வரு மென்பது எனக்குத் தெரியவில்லை. நானிதற்கு முன் னொருதரம் உங்கள் வீட்டுக்கு வந்தபோது உங்கள் சாப்பாடு வெகு சாதாரணமாயும் நன்றாய்ப் பாகம் பண்ணப்பட்டதாயு மிருந்தது. குழந்தைகளெல்லாம் சந்தோஷத்தோடு சிரித்து விளையாடிக் கொண்டிருந்தன. இன்றைக்கெப்படியிருக்கிறது. நிரம்ப விலையுயர்ந்த உணவுகளைச் சரியாய்ப்பாகஞ்செய்யாமல் கெடுத்துப் பெரியவிருந்து செய்தீர்கள். குழந்தைகளெல்லாம் சரியாய்ப் போஷிக்கப்படாமல் வேறொரு அறையிலடைக்கப்பட் டிருந்தபடியால் சத்தம் போட்டுக்கொண்டு சண்டை செய்துகொண் டிருந்தார்கள். குழந்தைகளின் தாயோ வெகு கவலையுடனே மனவருத்தப்பட்டுக்கொண்டு விருந்து நன்றாய் முடியவேண்டுமே யென்ற ஓரே சங்கதியைப்பத்தி யோசித்துக்கொண்டு கேட்ட கேள்விகளுக்குச்கூட பதில் சொல்லமுடியாம லிருந்தாள்.''

சத்தியவதி.—என்ன மாமா இப்படி சொல்லுகிறீர்களே.

மாமா.—ஆம். ஒருக்கால் மற்றவர்களும்இப்படித்தான்செய்கிறார்கள் என்று நீ சொல்வாய். பெரிய பணக்காரர்களுக்கு டம்பமாய்க் குடித்தனம் பண்ணுவதினால் அதிகக்கெடுதல் நேரிடாது. ஆனாலுங்களுடைய ஸ்திதிக்கு அவ்வளவு டம்பமாயிருந்தால் கட்டுமோ?

சத்தியவதி.—தாங்கள் சொல்லுவது வாஸ்தவந்தான். இன்றையதின மெங்களுடையதுரதிஷ்டத்தினால் சமையலெல்லாங் கெட்டுப்போய்விட்டது. வேலைக்காரர்களுக் கொன்றுந்தெரியவில்லை. இருந்தபோதிலும் இனிமேலாவது சரியாக நடக்குமென்று நம்புகிறேன். இப்பொழுது குழந்தைகளுக்காக புதிதாய் ஒருதாதி நியமித்திருக்கிறேன்.

மாமா.—தாதியா! குழந்தைகளை நீயே பார்த்துக்கொள். தாதியிடத்தி லொப்புவித்து விடாதே. குழந்தைகளை வேலைக்காரர்களிடத்திலொப்புவித்து விடுவதைப் பார்க்கும்போது எனக்கு வெகு கோபமுண்டாகிறது. சத்தியவதி, இன்றைக்குனக்கு வருத்த முண்டாகும்படி வெகு சங்கதி சொல்லிவிட்டே னென்று தோன்றுகிறது. இவ்விடத்தில் நடந்த விஷயங்களைக்காண எனக்கும் வருத்தமுண்டாகிறது. ஆனால் நானுனக்கிதுவரைச் செய்திருக்கிற நன்மைகளைக் காட்டிலு மதிகமான நன்மையைக் கொடுக்கும்படியான புத்தி மதிகளைக் கொடுப்பதென் கடமை யென்று நினைத்தேன். ஆகையால் கடைசியாய்ச் சொல்லவேண்டியதென்ன வென்றால்: ''அவரவர்களுடையநிலமைக்குத்தகுந்தபடி குடித்தனம் பண்ணுவது தகுதியே த்விர மேலானவர்களைப் பார்த்து அவர்களைப்போல் குடித்தனம்பண்ண எத்தனித்து முற்றிலும்நடத்தமுடியாமல் போவதிலுபயோக மென்ன:'' வென்றுசொல்லிவிட்டுப்போய்விட்டார். அவர் போனவுடனே அவர்சொன்னசங்கதிகளையெல்லாம் நினைத்து சத்தியவதி யழுதுகொண்டிருந்தாள்.

தர்மசீலன்.—''சத்தியவதி, யென்னவிசேஷம்'' என ழுதுகொண்டிருக்கிறாய். ஓ, ஆ,-எனக்குத்தெரிந்தது. மாமா அதிகச்செலவு செய்வதுபிசகென் றுன்னிடத்தில் பிரசங்கித்தார் போலிருக்கிறது. இன்று நடந்த விருந்தைப்போல அவரெங்கும் பார்த்திருக்க மாட்டார். பணக்காரர்கள் குடித்தனத்தைப்பற்றி யவருக்கென்னதெரியும். நாம் சீக்கிரத்திற் கெட்டுப்போவோமென்று நினைத்துக்கொண்டிருப்பார். உன்னிடத்தி லென்னசொன்னார். சொல்லு பார்க்கலாம்.''

சத்தியவதி.—(யழுதுகொண்டு) விருந்து கொஞ்சமும் நன்றாயில்லை யென்று சொன்னார்.

தருமசீலன்.—மாமா சொன்னது வெகு மரியாதையாயிருக்கிறது.

சத்தியவதி.—(கொஞ்சம் வெட்கத்துடனே) அவர் சொன்னது வாஸ்தவந்தான். அதினால் தான் எனக்கு வெகு வருத்தமாயிருக்கிறது.

தருமசீலன்.—அதற்காக வருத்தப்படாதே. எல்லாம் நம்முடைய வேலைக்காரர்களுடைய புத்தியின்மையால் வந்ததென்று அவர்களுக்குச் சொல்லிவிட்டேன்.

இதுமுதல் மாமா இவர்கள் வீட்டுக் கடிக்கடிவருகிறதில்லை. சத்தியவதியு மடிக்கடி யவர் வருவதில் என்ன பிரயோசனமென்று நினைக்கத் தலைப்பட்டாள். அந்தவருஷம் முடிந்தவுடனே தருமசீலன் கணக்குப் பார்க்கும்பொழுது அவ் வருஷத்தி லொன்றும்மிகுதியாகாமல் போனதுந்தவிர இதற்குமுன்

கையிலிருந்த முதலுங் கொஞ்சஞ் செலவாய்ப்போய் விட்டதென்று கண்டு வெகு வருத்தப்பட்டு இனி யென்ன செய்கிறதென்று யோசித்துக் கொண்டிருந் தான். சில நாளாய் வரும்படியுங் குறைந்து விட்டது. இச்சங்கதிகளை யெல்லாம் சத்தியவதி யிடத்தில் சொன்னவுடனே அவள் நம்முடைய செலவைக் குறைத்துப்போடலா மென்றாள். ஆனால் ஒவ்வொரு இனமாய்ப் பார்க்கும்போது ஒரு செலவையும் குறைக்க முடியவில்லை. ஒருநாள் சத்தியவதி சொல்லுகிறாள், 'ஆதியிலிருந்த ஸ்திதிக்குநாம் எதிர்பார்க்கக்கூடாத அவ்வளவு நல்ல ஸ்திதியி லிருப்பதே ஒரு சந்தோஷமல்லவா. இதுவரை நாம் வரும்படிக்குமேலிட்ட செலவு செய்யவில்லை''—யென்று இப்படி நிஜத்தை யொப்புக்கொள்ள இஷ்டமில்லாதவர்களாய் சுதர்சனனு மின்னு மற்றவர்களும்அதேவரும்படியில் தங்களைப்பார்க்கிலும் டம்பமாய்க் குடித்தனம் பண்ணிக் கொண்டிருக்கிறார்களே யென்று மனதைத் தைரியப்படுத்திக் கொண்டார்கள்.

கே. ஜெயராமய்யர், பி. ஏ.

## ஸ்ரீமத் திராவிட ஆயுள்வேதம்.

(திராவிட ஆயுள்வேத வைத்தியர் ஒருவர் எழுதியது.)

### சிகிச்சை.

(341-வது பக்கத்தொடர்ச்சி.)

மருத்துவக்கலைகள் பிணிகளின் இலக்கணங்களைக் கூறியபின்னர், அவைகளை நீக்கு முபாயங்கள் அல்லது சிகிச்சைகளைக் கூறியிருக்கின்றன. சிகிச்சைகள் மூன்று வகைப்படும், அவையாவன:—

(1) ரசம், கந்தகம், பாஷாணம், பஸ்பம் முதலியவைகளைக் கொண்டு செய்வது தேவகண சிகிச்சை.

(2) விருக்ஷாதி மூலிகளைக கொண்டு செய்வதுமானுடகண சிகிச்சை.

(3) உதிரக்களைதல், அறுத்தல், சுடுதல்,காரம்வைத்தல் ஆகிய இவைகளைச் செய்வது இராக்ஷதகண சிகிக்சை.

பிரமாணம்:

"சூதகந்தி தாதுபஸ்மஞ் சொர்ன்னாட் டார்சிகி [ச்சை
ஓதரிய மூலியிம்மண் ணூர்ச்சிகிச்சை-வேதடருஞ்
சத்திரசா ராக்கினிகி சாசார்ச்சி கிச்சையொன்றே
முத்திறத்த தாகு மொழி''

இம்மூவிதச் சிகிச்சைகளை இன்னதென்றும், இன்னின்ன வியாதிகட்கு இன்னின்னது செய்யப்படுமென்றும், அவைகளின் ஔஷதங்களையும் தொகுத்துக் கூறப்படும்.

தேவகண சிகிச்சை: ரசகந்த பாஷாண பஸ்பங் ஏறக்குறைய முற்கூறிய வியாதிகளைக் குபயோகிப்பது. தேவகணத்தார் பாதரசம், ரசாஞ்சனம், ரசகர்ப்பூரம், சாதிலிங்கம், சவ்வீரம், நெல்லிக்காய்க் கந்தகம், வாணக்கந்தகம், தாளகம், லவணம், சிவந்த அரிதாரம், மனோசிலை, மிருதாரசிங்கி, பாஷாணம், ஆகிய இவைகளைச் "சூத்திக்கிரமம்'' என்னுஞ் சாத்திர முறைப்படி சுத்திசெய்து தனியாயுங் கொடுப்பதுண்டு. இவைகளில் ரசம், கந்தகம், தாளகம், மிருதாரசிங்கி இவைகளைப் பஸ்மித்தும், அபம், காந்தம், மண்ரோம் இவைகளைச்சிந்தூரித்தும்,வங்கத்தைப்பஸ்மித்துஞ் சிந்தூரித்தும், தாம்பிரம், பவளம், சிருங்கி, வெள்ளி, நாகம், சிலாசத்து, சொர்ணம், முத்து, லவணம் இவைகளைப் பஸ்மித்தும், தக்கபிணிகளுக்கு வேண்டு நாள்வரை பத்தியத்துடன் கொடுத்து வருவார்கள்.

மானுடகண சிகிச்சை: விருக்ஷாதி மூலிகளைக் கொண்டு செய்தல். மூலிகள் நால்வகைத்து. அவையாவன: விருக்ஷம்,கொடி,செடி,புல் என்பன. இவைகள் ஒவ்வொன்றினும் வேர், பட்டை,கட்டை,ரசம் இலை, புஷ்பம், பழம், வித்து, எனும்எண்வகைப்பதார்த்தங்கள் இருக்கின்றன. இவை ஒவ்வொன்றும்,கசப்பு, உப்பு, தித்திப்பு, கார்ப்பு, புளிப்பு, துவர்ப்பு, ஆகிய அறுவகை ருசிகளையும் பெற்றிருக்கும்.

இதற்குப் பிரமாணம்:

ஆதியுரி யுண்ணீரடைமலர்மென்காய்விதையென்
றோதுபதார்த்தமிவையோ ரெட்டும்—பூதலத்துள்
கைப்புவர்ப்புத் தித்திப் புக்கார்ப்புபுளிப்புத்துவர்ப்
வையா றும்பொருந்து மால்.''

இத்திறச்சிகிச்சைக்குரிய மரம், செடி, கொடி, புல் இவைகளின் பெயர்களையும், குணங்களையும் "பதார்த்த குணசிந்தாமணி'' என்னும் நூலிற் தெளிந்து, சுத்திசெய்து, "சிகிச்சாசாரம்'' என்னுஞ் சாத்திரத்தின்படி முப்பத்திரண்டு ஔஷதங்கள் செய்து முற்கூறிய பிணிகளுக்குக் கொடுத்தல் வேண்டும். ஔஷதங்கள் இலகுமுறையாயிருந்தாலும், பக்குவ பாகத்தைப் பொருந்துமானால், அது தேவர்கள் உண்ணத் திருப்பாற்கடலிற் பிறந்த அமிர்தத்திற்கொப்பாகும். கனமான முறையினாற் செய்யப்பட்ட மகா மேக ராசாங்கத்தைலம் போன்ற ஔஷதங்களும்செய்பாகங் கெடுமானால் அக்காலத்தில் சேஷன் கக்கிய விஷத்திற் கொப்பாகும். ஆதலால் ஔஷதங்களை எல்லாம் செய்பாகந்தவறாது செய்தல் வேண்டும்.

பிரமாணம்:

பக்குவபா கத்தையுறு பஞ்சின்மருந்தும் பிழை
பக்குவ பாகத்துப் பருமருந்து—மெய்க்குறுங்க
லக்கால மும்பருணு மாழிமருந் துஞ்சேடன்
கக்கால மும்பொருந்துங் காண்.''

### உதிரங்களைதல்

**இராக்ஷதகண சிகிச்சை:** இரத்தப் பெருக்குப் போன்ற வியாதிகளில் உள்ள இரத்தத்தைகுழலில் ஊதிக், கண்ணாடித் துண்டுகளாற் கீறி, உள்ள இரத்தத்தை எடுத்துவிடல்.

**அறுத்தல்:** சிலந்தி, பரு முதலியவைகள் பழுத்து, முனைவைத்து இருக்கும்போது உள்ளிருக்கும் சீழை வெளிப்படுத்துதற்குவேண்டும் ஆயுதங்களால் அறுத்துவிடல். மகோதர ரோகத்தில் துர்நீர் அதிகரித்து வயிற்றங்கும் வீங்கிச், சுவாசம் வெளிப்படக் கூடாதிருக்கும்போதும்,உந்தியின்பால் சிறு துவாரமிட்டு, உள்ள துர்நீரைக் குழலின்வழியாய் எடுத்தல்.

**காரம்வைத்தல்:** ஆழிபுண் முதலியவைகளுக்குக் களிம்பு, ஒற்றிடம், மோதகம் முதலியவைகளை உபயோகித்தும் பயன்படா திருந்தால், மயிற்றுத்தம், வெள்ளைப்பாஷாணம், கௌரிபாஷாணம் முதலிய காரம் வைத்துக், களிம்பாதிகளை உபயோகித்தும் குணப்படுத்தல்.

**சுடுதல்:** நரம்பு வியாதிகள், காமாலை முதலிய ரோகங்களுக்கு, மஞ்சள், கருவளையல், எழுத்தாணிக் காம்பு அல்லது இதுபோன்ற ஆயுதங்களைச் சுட்டு ரோகமுற்று வருத்துமிடத்திற்குச் சூடுபோடுதல், இரத்தப்பெருக்கு உதிரங்களைந்தும், பரு முதலியவைகளை யறுத்தும், அழிபுண் முதலியவைகளுக்குக் காரம் வைத்தும், நரம்பு வியாதிகளுக்குச் சுட்டும், வேண்டும் சிகிச்சைகள் செய்தாலொழியக் குணம் முற்று முறாதாகையால், இவைகளைக் கொடுந்தொழில் என்று பயப்படாது செய்தல் நோயுற்றோர் கடமை.

**இதுநிற்க:** எமது மருத்துவர்கள் சூதமுதலிய மருந்துகளை நிறுத்து அளவிட்டுக் கொடுக்காது, அதிகமாய் வழங்கிவருகிறார்கள் என்றும், மருத்துவக்கலைகளும் அவ்வழித்தென்றும், இக்காலத் தாங்கிலேயசீர்மையுற்ற பல்லோர் குற்றஞ் சாற்றுகிறார்கள். இங்ஙன் குற்றங்கூறுவது போலிமருத்துவர்கட்கல்லது, ஸ்ரீமத் திராவிட ஆயுள்வேதத்திற்கும், ஆன்றோர் அனுபவங்கட்கும் முற்றும் மாறுபடுகின்றது. எங்ஙனமெனில், அவர்கள் மருத்துவகலைகளின் நுட்பங்களை இலேசான் அறியாத குறையால் இதை ஒன்றிரண்டு உதாரணங்களைக் கொண்டு விளக்கிக் காட்டப்படும். "காமியப்புண்ணுதிய நோய் கண்டாற் சவ்வீரனெனுஞ் சாமியினுமத்தை யுச்சரி" என்றதால், சவ்வீரமெனு மருந்து அதிக வீரியமுள்ளதுஎன்றும், அதிக சிற்றளவிற் கொடுக்குமுறை யாராய்ந்து கொடுக்கவேண்டுமென்பது "சவ்வீரனெனுஞ் சாமியினுமத்தை யுச்சரி" என்னும் இலேசான் சித்தித்தது. வேறொரு செய்யுளில்!

"ஒக்கும்ரச கர்ப்பூர மொன்றே யளவொடுகல்
விக்குவெல்லத் தேழுநா ளீ" என்றதனால், பல

பிணிகளுக்கு ரசகர்ப்பூரத்தை கொடுக்குமள வறிந்து, கரும்பு வெல்லத்திற் கொடுத்தல் வேண்டும் என்று பெற்றது. இவைபோன்ற செய்யுள்களால், மருந்துகள் கொடுக்கும் அளவுகளையும், பருவங்களையும், வேறு நூல்களிற் தெள்ளத்தெளியக் கூறப்பட்டிருக்கின்றது என்றும் அவைகளை ஐயந்திரிபறத் தெரிந்திருத்தல் வேண்டுமென்றும் புலப்படுகின்றது. இவைகள் எல்லாவற்றையும் ஒரே நூலிலும், போதுமானமட்டும் கூறப்பட்டு மிருக்கின்றது. அதற்கு "மகா குணபாடம்" என்று பெயர்.

கே. ஸி. துரைசாமி.

---

## நமது பார்வைக்கு வந்த புஸ்தகங்கள்.

### செய்யுளிலக்கணம்.

செய்யுளிலக்கணம் என்னும் நாமதேயத்தினையுடைய பிரபந்தமானது அஷ்டாவதானம்; பூவை - கலியாணசுந்தர முதலியாராற் செய்யற்பட்டுளது. இந் நூலின் விசேஷ லக்ஷண மென்னெனில்:—முன்னூல்கள்போலச் செய்யுள் ரூபத்தாலமைக்கற்படாது வசன ரூபத்தா ல்மைக்கறபட் டிருத்தலேயாம். தற்காலமாணவகர்க்கு வசனரூப விலக்கணங்களே மிகுதியும் பயன்படத்தக்கன வென்று உண்மையினை யுணர்ந்து யாப்பிலக்கணத்தை யாப்பாலமையாது கத்திய ரூபத்தில் நூல்வர அமைத்தது மிகவும் சந்தோஷிக்கவேண்டிய விஷயம். முதலில், இந்நூலானது பளபளப்புள்ள உயர்ந்த கடிதத்தில் பிரசுரஞ் செய்யற்பட்டிருக்கிற ரூபமொன்றே மாணாக்கர்க்கு வாசிக்க வேண்டுமென்ற எண்ணத்தை யுண்டாக்கி, யவர் மனத்தைக் கவருஞ் சக்தியுடைத்தாய்க் காணற்படுகின்றது.

இனியிது கிடக்க. இந்நூலானது இத்தன்மையது என்பதை யெமக்குத் தோன்றியவாறு கூறுகின்றோம். இஃது அமுதசாகரனாரியற்றிய யாப்பருங்கலக் காரிகையைப்போல் உறுப்பியல், செய்யுளியல், ஒழிபியல் என்ற மூவியல்களோடே நின்று விடாமல், பாட்டியல் என்று ஓரியல்கூட்டப்பெற்று நான்கியல்களோடு விளங்குகின்றது.

முதல்லாவது உறுப்பியலில் விசேஷமாக காரிகையை யநுசரித்திருக்கின்றார். உதாரணச் செய்யுள்களும் சிறந்தனவாகக் காணற்படுகின்றன. இரண்டாவதாகிய செய்யுளியலில் இலக்கண விளக்கத்தைத் தழுவியிருக்கின்றார். ஈண்டிவ்வியலிற் கூறப்பட்ட வுதாரணச் செய்யுட்களுட் சில நம்புலவராலேயே செய்யற்பட்டனவாகத் தெரியவருகின்றன. சில இவரியற்றிய திருவொற்றியூர்க் கலம்பகத்தி னின்று மெடுத்துரைக்கற்பட் டிருக்கின்றன.

கலிப்பாவி னிலக்கணத்தை யேனைய நூல்களைப் போலாது குழப்பமின்றிச் செவ்வனே யெளிதின் விளங்குமாறு கூறியிருக்கின்றனர். இனி யிவ்வியவின்கண் ஆசிரியப்பாவினினமாகிய வண்ணப்பாவின் இலக்கணமானது தெளிவுற விளக்கற்பட்டிருத்தல் இந்நூற்கொரு சிறப்பிலக்கணமாம். மூன்றாவதாகிய ஒழிபியலில், உறுப்பியல் செய்யுளியல்களிற் கூறாதொழிந்தனவற்றையும், ஆநந்தம் முதலிய தோஷங்களையும்பற்றி விவரிக்கின்றார். இனி நான் சாவதாயபாட்டியலில் வீரமாமுனிவர் செய்த தொன்

னூல் விளக்கத்தின் யாப்பதிகாரத்து மூன்றாமோத்தாகிய செய்யுண் மரபியலையும், வைத்தியநாத நாவலர் செய்த இலக்கண விளக்கத்தின் பொருளதிகாரத்து ஐந்தாமியலாகிய பாட்டியலின் முற்பகுதியினையும் அநுசரித்திருக்கிறார்.

இனிப் பொதுப்படப் பேசுமிடத்து நம்புலவர் சுயமாக யாப்பினைப் பாகுபாடுசெய்து நன்கு அமைத்திருத்தல் இப்புத்தகத்தைப் பார்த்த யாவர்க்குந் தெரியும். இதுபற்றியன்றே பிரம்மஸ்ரீ மி. சேஷகிரி சாஸ்திரியாரவர்களும், ம-௱-௱-ஸ்ரீ தாமோதரம் பிள்ளையவர்களும் இதின் நயத்தை யெடுத்துப்பேசியிருக்கின்றனர். நம்புலவர்க்கு முன்னரே திருத்தணிகைச் சரவணப் பெருமாளையர் யாப்பினை வசநத்தாலியற்றிப் பாலபோத விலக்கணத்தி னொருபகுதியாக அச்சிட்டிருக்கின்றனர். அதுவே மாணாக்கர்கட்குப் போதுமான அளவினதாயிருப்பினும், பாகுபாடு, வண்ணம், பாட்டியல் இவற்றை நோக்கின், நம்புலவர்செய்த செய்யுளிலக்கணம் அதனினுஞ் சிறந்ததெனப்படும்.

இனியிதுகிடக்க; 1894௵ பி. ஏ. பரீட்சைக்குப் படிக்குந் தமிழ் மாணாக்கர்க்கு இலக்கண விளக்கத்தினின்றும் செய்யுளியல் என்ற ஒரு பகுதியானது பாடமாக நியமிக்கப்பட்டிருத்தலின், அம்மாணாக்கர்கள் முதலில் நம்புலவர் நூலைப்படித்துவிட்டுப் பிறகு இலக்கண விளக்கம் படிக்கப் புகுவரேல் நலமாயிருக்குமென்றது எமது துணிவு.

**வி. கோ. சூரியநாராயண சாஸ்திரி, பி. ஏ.**

——o——

### ஆரிய தேசாபிமானக் கும்மி.

இது 20-பக்கங்களடங்கிய ஒரு சிறு புத்தகம். இதில் 100 கும்மிப்பாட்டுகளும், ஒரு துதிவெண்பாவும், ஒரு வாழ்த்துக்கும்மியு மடங்கி யிருக்கின்றன. இது கடைத்தெருப் புத்தகங்கள் போலாது சற்றுயர்ந்த கடிதத்திற் பிரசுரிக்கற் பட்டுளது. இது நம் இந்துஜன சீர்திருத்தத்திற்கு ஏற்பட்ட புத்தகங்களிலொன்றென்று குறிப்பிக்கற்பட் டிருக்கிறது. இது ஆரியர்கள் ஒருமித்து வாழ்ந்திருந்ததையும், பிறகு பிரிந்து பல நாடுகட்குப் போகும்படி நேரிட்டதையும், அவர்களிற் சிலர் இந்தியாவிற்கு வந்ததையும், வந்தபின் மதபேதம் ஜாதிபேதம் முதலியன வேற்பட்டதினாலே யுண்டாகிய கேட்டினையும், தாழ்வினையும், பிறகு பற்பல ஜாதியார்களாற் றோல்வியடைந்து மானமிழந்து வலியிழந்து நம் இந்து தேச ஆரியர்கள் வருந்தினதையும், பிறகு ஆங்கிலேய ஆட்சிக்குட்பட்டுச் சிறப்படைந்து வருகிறதையும்பற்றி நன்கு சொல்லுகின்றது. கும்மிச்சந்தமும் சொற்போக்கும் நன்றாக அமைந்திருக்கிறது. தற்காலத்தில் இத்தகைய புத்தகங்கள் நம்வீட்டு ஸ்திரீகளிடத்து நாகரீகத்தையும், முன்னிருந்த ஆரியர் நிலைமையின் உணர்ச்சியையும் உண்டாக்கி யநேக விதமான நன்மைகளைச்செய்யும் நோக்கத்தினதாகவுங் காணப்படுகிறது. இப்புஸ்தகம் பெண்பாடசாலைகளில் உபயோகிக்கப்பட மிகவும் ஏற்றதாயிருக்கிறது. இதன் விலை அரை அணாவே. பெண்பாடசாலைகளில் உபயோகிக்க வேண்டி இச்சிறுபுஸ்தகம் மாதிரிக்கு வேண்டுவோர் அரையணா தபால்தலை யனுப்பி இப்பத்திரிகை பிரசுரிக்கும் அறிவைப் பரவச்செய்யும் சபை (ஏஜன்ஸி) யின் காரியதரிசிக்கு எழுதிக்கொள்ளக் கிடைக்கும்.

---

## சிறுவர்க்கான ஜாலவினோதங்கள்.

(350-வது பக்கத் தொடர்ச்சி.)

### 31. சுழன்றுகொண்டிறங்கும் மோதிரம்.

சுமார் $\frac{1}{4}$ அங்குலம் கனமுள்ளதும் கையின் சிறுவிரல் நுழையக்கூடியதுமான அவ்வளவுசிறிதான ரப்பர் (Rubber) மோதிரத்தை $\frac{1}{4}$ அங்குலம்கனமான முறுக்கிய ஒரு பஞ்சுநூற் கயிற்றில் கோத்து, கயிற்றின் ஒரு முனையை காலின் பெருவிரலால் மிதித்துக்கொண்டு மற்றொரு முனையைக் கையால் இறுக்கமாயும் செங்குத்தாயும் பிடித்துக்கொண்டு கோத்திருக்கும் மோதிரத்தை கயிற்றின்மேல் கொண்டுவந்து விட்டுவிட கயிற்றின் மூலமாய் சரேலென்று கீழே விழுந்துவிடும். ஆனால் மறுபடியும் மோதிரத்தைக் கயிற்றின் மேற்புறத்தில் கொண்டுவந்து சுழற்றிவிட்டுவிட கயிறு எவ்வளவு நீளமிருந்தாலும் அந்நீள முழுவதும் கரகரவென்று சுழன்றுகொண்டே வெகு விநோதமாய் இறங்கும். இரப்பர் மோதிரமகப்படாவிட்டால் அதற்குப் பதில் யாதாயினுமொரு இலேசான மரத்தில்செய்யப்பட்ட மோதிரத்தை உபயோகிக்கலாம். கயிற்றுக்குப் பதில் ஒழுங்கான ஒருபிரம்புகோலை உபயோகிக்கலாம்.

### 32. நாம் சுவாசிக்கும் ஆகாயத்தில் *மறைதாபம் உண்டா?

உண்டு. இதை விளக்கமாய் அறியவேண்டின், சுமார் ஒரு அடி நீளமுள்ள மரத்தால் அல்லது ஒரு உலோகத்தால் செய்த ஒரு குழையை எடுத்து, ஒருபக்கத்தை நன்றாய் அடைத்து, குழைக்குள் சக்கிமுக்கிப் பஞ்சு அல்லது ஒரு நெருப்புக்குச்சியை குழலில் போட்டு அது அடியில் தங்க, குழைத் துவாரத்துக்குச் சரியாயும் பிகுவாயும் பிடிக்கிற ஒரு கட்டையைச் சட்டென்று குழைக்குள் செலுத்தினால், உள்ளே இருக்கும் வாயு நெருக்கப்பட்டு அதிலிருந்துண்டான சூட்டினால் பஞ்சு அல்லது நெருப்புக்குச்சி பற்றிக்கொள்ளும். ஆகாயத்தில் உஷ்ணமானது ஈரத்துணியிலிருக்கும் ஜலம்போல் மறைந்திருக்கிறது. ஈரத்துணியைக் கையாலே பிழிய நீர் வெளிப்படுவது போல், ஆகாயமும் நெருக்கப்படுகிறதினால் அதிலுள்ள உஷ்ணம் வெளிக்கு வருகிறது.

### 33. வெண்கல சுத்தி.

தட்டினால் மணிபோல் ஒலிக்கும் ஒருவெண்கலக் கிண்ணியை மேசையின் மேல் கவிழ்த்து, கறுப்புமெழுகில் ஒருசுண்டைக்காயளவு எடுத்துதட்டையாய்த் தட்டி பாத்திரத்தின் மேற்புறத்தின் நடுவில் அழுத்திவைத்துப் பின்பு சுமார் இரண்டடி நீளமுள்ள மெல்லிய பிரம்புக்கோலின் மேற்புறமுழுவதும் ஷை

---

* Latent heat,

மெழுக்கை இலேசாய்த் தடவி பிரம்பின் ஒருமுனையை வெண்கலப் பாத்திரத்தின்மேல் வைத்திருக்கும் மெழுக்கில் பதியஊன்றவைத்து, இரண்டு கை,பெருவிரல் சுட்டுவிரலாலும் மாற்றி மாற்றி பால் கறப்பதுபோல் பிரம்பின் மேலிருந்து அடிவரையிலும் விடாது தடவ நாவிதன் ஊதும் சுத்திபோல் வெகு இனிமையும் நாதமுமான ஒலி கேட்கும். இவ்வாறே தவலையிலும் மேளத்தின் மேலும் செய்யலாம். பிரம்புக்குப்பதில் தென்னமரத்து ஈர்க்கை உபயோகித்துக் கொள்ளலாம்.

ஒரு செப்புப்பானையின் வாயை ஒரு மிருகத்தின் ஜவ்வால் மூடி உலர்ந்தபின்பு, தோலின் நடுவில் ஊசித்துவாரம்செய்து அதில் ஒரு குதிரைமயிரை மாட்டி, மயிரில் ரோசனம் தடவி பால் கறக்குமாறு இரு கைப்பெருவிரல் சுட்டு விரலாலும் இழுக்க இராக்ஷதன் உறுமுகிறுப்போல் கேட்கும். சிலதேசங்களில் உழவோர்கள் கழனிகளில் இரவில் வந்து பயிரை நாசம் செய்யும் பன்றி முதலானவைகளைப் பயமுறுத்தித் துரத்த இக்கருவியை உபயோகிக்கின்றனர்.

### 34. நாக முட்டை.

பொட்டாஷியம் பைக்ரோமேட் ... 2—பாகம்
(Potassium bichromate)
பொட்டாஷியம் நைட்ரேட் ... 1 ,,
(Potassium nitrate)
வெள்ளை சர்க்கரை ... ... 3 ,,

மேற்சொன்ன வஸ்துகளை குறித்தபாகப்படி எடுத்து தனித்தனியாய்ப் பொடிசெய்து ஒன்றாய்க் கலந்து, கலந்த தூளால் சிறு மத்தாப்புகள் செய்து காயவைத்து, ஒரு அறையில் இம்மத்தாப்புகளி லொன்றைக் கொளுத்த, உடனே மத்தாப்பினின்று நாகம் சீறி வெளியில் புறப்படுவதுபோல் புகை புறப்படும். கண்டவர்களெல்லோரும் சர்ப்பமே மத்தாப்பி லிருந்து உதித்ததென்று எண்ணுவார்கள். மேற்கூறிய கலப்புத்திரவியங்களில் பொட்டாஷியம் பைக்ரோமேட்டைப் பொடிசெய்யுங்கால் உண்டாகும் தூசை முகராதபடி வெகுசாக்கிரதையா யிருக்கவும்.

இங்கிலீஷ் மருந்து ஷாப்புகளில் ஸல்போ ஸையானைட் ஆப் மேர்க்குறி (Sulpho Cyanide of Mercury) அல்லது பாரோ சர்ப்பங்கள் (Pharoa's Serpents) என்னும் ஓர் மருந்து விற்கின்றது. அதைக் கொளுத்தினால் மேற்சொன்ன விதமாய் நாகம் உண்டாகிறது. ஆனாலிதைக் கொளுத்தும் போது உண்டாகும் புகையும், கொளுத்தி எஞ்சி நின்ற சாம்பலும் கொடிய விஷமாகையால் அம்மருந்தைக் கொளுத்தும்போது காற்றுத் தாராளமாய் நடமாடும் வீட்டில் வைத்து கொளுத்துவதோடு எரியும்போது உண்டாகும் புகையை முகராமலும் பற்றி நின்ற சாம்பலை ஒருவருந்தொடாதபடி பற்றி எரிந்தபின் சாக்கிரதையாயிருந்து தொலைதூரத்தில் எறிய வேண்டியது.

### 35. மலிவான நெருப்புக் கண்ணாடி.

யாராவது ஒரு ஐரோப்பியன் வீட்டுக்குப்போனால் அவன் வீட்டில் வட்டமேஜையின் மீது நடுவில் அலங்காரமாகக்காகிதத்தால்செய்த புஷ்பச்செடிகள்,பொம்மைகள்இவைகளைவைத்து உடல் ஸ்தம்பவடிவாயும் மேற்பாகம் கும்மட்டம் வடிவாயுமுள்ள ஒரு கண்ணாடி மூடியைக் காணலாம். இதற்கு இங்கிலீஷ் பாஷையில் டோம் (Dome) அல்லது கிளாஸ் ஷேட் (glass shade) என்று பெயர். இந்த மூடி ஒன்றை எடுத்து அதில் கொஞ்சம் சலம் வார்த்து உச்சிவேளையில் வெயிலில் அசையாது பிடிக்க, சூரியன் கிரணங்கள் சலத்தின் மூலமாய்ச்சென்று அடியில் சற்றுதூரத்தில் கண்ணால் பார்க்கக்கூடாத அவ்வளவு பிரகாசமான ஒரு புள்ளியாய்க்கூடும். அப்புள்ளியை பற்றிக்கொள்ளும் எவ்வஸ்துவின் மேலாவது விழவிட, அவ்வஸ்து உடனே தீப்பற்றிக்கொள்ளும்.

இதே பிரகாரம் உடல் உண்டைவடிவாயும், மற்றபாகம் நீண்டும் இருக்கிற ஒரு கண்ணாடிச் சிமினியில் ஜலம்வார்த்து சிந்தாவண்ணம் சமமாய் வெயிலில் பிடித்து அடியில் தோன்றும் ஒளிப்புள்ளியில் பற்றிக்கொள்ளக் கூடிய எவ்வஸ்துவையாவது பிடிக்க உடனே நெருப்பு அண்டிக்கொள்ளும்.

பளிங்குபோன்ற எவ்வஸ்துக்களின் மூலமாயாவது ஒளி ஊடுருவிச் சென்றால் அது பளிங்கில் எப்பாகம் கனத்திருக்கிறதோ அப்பாகமாய் வளையுந் தன்மையையுடையது. மேற்குறித்த இரண்டு சாமான்களில் சலம் வார்த்த பின்பு ஓரத்தைவிட நடுவில் அதிக சலம் இருப்பதால், ஒளியானது மேற்புறம் புகுந்து நடுப் பக்கமாய் வளைகிறது. இப்படி வளைவதினால் தான்ஒளியின் கிரணங்கள் சற்றுத்தூரம் சென்றுஒன்றுகூடி ஒளிப்புள்ளி யாகிறது. ஒரு பூதக்கண்ணாடியையெடுத்து கையால் தடவிப்பார்த்தால் நடுவில் விம்மியும் ஓரம் இலேசாயு மிருக்கும். அனேகர் நெருப்பு பற்றுங்குணம் நெருப்புக்கண்ணாடி செய்யப்பட்ட கலப்புத் திரவியங்களாலுண்டாகிறதென்றும், ஜலம் நீர்க்கட்டி, கடலுப்பு முதலான தெளிந்த பதார்த்தங்களால் செய்யப்பட்ட பூதக்கண்ணாடியை வெயிலில் பிடிக்கின் நெருப்பு பற்றாதென்றும் எண்ணுகின்றனர். இது தப்பிதம். மேற்சொன்னபதார்த்தங்களால் செய்யப்பட்ட பூதக்கண்ணாடிகளால் நெருப்பு தவறாது பற்றும்.

பந்துபோல் திரண்டும் உள்ளே போலாயுமிருக்கும் ஒரு கண்ணாடிக் குவளையில்ஜலம் வார்த்து வெயிலில் பிடிக்க அதுவும் சூரியன்சுடரை கீழேஒன்றாய்ச் சேர்க்கும். அவ்விடத்தில் பற்றிக்கொள்ளக் கூடிய எவ்வஸ்துவையும் பிடிக்க, தீ அண்டிக்கொள்ளும். கண்ணாடி உண்டை போலாயல்லாது கெட்டியாயுமிருக்கலாம். இவ்வுண்டைகளை துப்பாக்கி மருந்து வெடில் மருந்து இருக்கும் இடங்களில் வைக்கக்கூடாது. ஏனெனில், வெய்யில் கண்ணாடியின் மேல் விழுந்தால் அதின் கிரணங்கள் கீழே சென்று ஒளிப்புள்ளியாய்க்கூடி அக்கினியை உண்டாக்கும்.

மா. நடேசன்.

# சிறுவர்க்கான பக்கம்.

[விவேக சிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

## தாதா எழுதிய கடிதம்.

### IV.

பிள்ளைகளே! பெண்மணிகளே! என் கண்ணின் கருமணிகளே!

நான் மூன்றாந்தரம் உங்களுக்குக் கதைசொல்ல வந்தபோது என்தங்கை பள்ளிக்கூடம் போனதைப் பற்றிச்சொல்ல இருந்தேன். ஆனாலும் அப்பொழுது எனக்கு உடம்பு ஒன்றும் சரியாக இல்லாமல் போனதினால் சிலசிறுகதைகளைச்சொல்லி பொழுதுபோகிற வேளையில் உங்களை வீட்டுக்கு அனுப்பி விட்டேன். அதற்கப்புறம் இரண்டுமாசமாக ஒரு பரீக்ஷையின் நிமித்தமாய் உங்களை நேரில் வந்து கண்குளிரப் பார்ப்பதற்கு ஒழிவில்லாமல் "நெஞ்சாரப்பொய்தன்னைச் சொல்ல வேண்டாம்" — "சூதும்வாதும் வேதனைசெய்யும்" என்கிற நீதிக் கதைகளை எழுதித் தபால்மூலமாக அனுப்பினேன். முந்தநாளில் கிழங்கட்டுகள் கூடப் பரீக்ஷைகொடுத்துக் கொண்டிருந்தால்தான் காலத்தை நல்லபடி க்ஷேமமாகத் தள்ளிக்கொண்டு போகலாம். நான் கொடுத்த பரீக்ஷையை இன்னதென்று உங்களிடத்தில் சொன்னால் நீங்கள் "இன்னா! தாதா! பதினெட்டு இருவது வயசு பசங்கள் படிக்கிற பரீக்ஷைக்கா இப்ப போனே" என்று பரிகாசம் பண்ணுவீர்கள். என்னுடைய தகப்பனார் நான் நன்றாகப் படித்துக்கொண்டிருந்த காலத்தில் திடீரென்று ஒரு வியாதிகண்டு இறந்துபோய் விட்டார்: அதனால் நான் பள்ளிக்கூடத்தை விட்டுவிட்டு ஒரு உத்தியோகத்தைத் தேடிக்கொண்டு சமுசாரத்தைப்பார்த்துக்கொள்ள வேண்டியதாயிற்று. இப்போது குடித்தனம் பெருகிவிட்டது: குழந்தைகள் நால்வர் ஆய்விட்டார்கள். எனக்குசம்பளம் வருகிறது போதுமானதாக இல்லை, எங்கள் துரை பெரிய பரீக்ஷை கொடுத்தவர்களுக்கே உயர்ந்த சம்பளங் கொடுக்கிறான். அதனால் நானும் நரைத்துப் பழுத்தவனாகியும் ஒரு பெரிய பரீக்ஷை கொடுக்கும்படியாயிற்று. ஆகையால் நீங்கள் இந்த இளம்பிராயத்திலே தானே சற்று ஊக்கமாகப் படியுங்கள். அதிகவயதாகிவிட்டால் ஒருபக்கம் பெண்டாட்டி பிள்ளைகளுக்கு உத்தரவு சொல்வதோடு, ஒருபக்கம் மூக்குக் கண்ணாடி போட்டுக்கொண்டு இரவில் கண்விழித்து விளக்கின் எதிரில் கஷ்டமான பாடங்களை நிதானமாகப் படிப்பது அதிக வருத்தமாகத் தோன்றும். இதுவுமல்லாமல் பரீக்ஷையில் சின்னஞ்சிறு பிள்ளைகள் நமக்கு மேலே போய்விட்டால் பரீக்ஷைகொடுத்தும் ஒரு சந்தேகம் பக்ஷம் அவமானம்உண்டாகும். ஆகையால் "இளமையிற்கல்" என்பதையும் "சிறுமையிற் கல்வி சிலையிலெழுத்து" என்பதையும் மறவாமல், "நூறுநாள் ஓதி ஆறுநாள் விடத்திரும்" என்கிறபடியால் பாடம்ஏறினும் ஏடதனைக் கைவிடாமல், "ஓதுவதொழியேல்" என்பதையும் "கற்கை நன்றே கற்கை நன்றே" என்பதையும் நினைவில் வைத்துக்கொண்டு, அகோராத்திரம் கல்வியைப் பாராட்டிக்கொண்டிருங்கள். ஏனென்றால் எப்படியும் "வித்துவான் தனவான்" அல்லவா. இது கிடக்கட்டும்.

இப்பொழுது இளவேனில் என்கிற வசந்தகாலம் வந்துவிட்டது. காற்று அதிக ஆரோக்கியமாக அடிக்கிறது. அதோ தெரிகிற அந்தச் சோலைக்குப் போகலாம் வாருங்கள். சோலையின் சமீபமாகப் போகப் போக எப்படி புஷ்பவாசனை பரிமளிக்கிறது பார்த்தீர்களா. கிளிகள் கொஞ்சுவதையும் குயில்கள் பாடுவதையும் உற்றுக்கேளுங்கள். வீணை வாத்தியங்கூட இதற்குச் சமானமாகுமா. இதோ இந்த மாமரத்தைப் பாருங்கள்: பச்சைக் கம்பளியால் கூடாரம் அடித்திருக்கிறதுபோல் காணப்படுகிறதே: சடை விரிந்திருக்கும் சந்நியாசிகளைப்போல் காணப்படுகிற அந்தக் கூந்தல்பனை மரங்களைப் பாருங்கள். அதோ அந்த குலைதள்ளி யிருக்கிற வாழை மரத்தையும் அதைச்சுற்றி யிருக்கிற கீழ்க்கன்றுகளையும் பாருங்கள்: குலைதள்ளியிருக்கிற வாழையானது கற்றுத் தெளிந்த பெரியோர்களைப்போல வணங்கி நிற்கின்றது: கீழ்க்கன்றுகளானவை, சொன்னாலுங் கேளாமல் சுயபுத்தியுமில்லாமல் கர்வத்துடன் முடுக்கா இருக்கின்ற மூடர்களைப்போல நிமிர்ந்திருக்கின்றன. வேலியில் நிற்கின்ற ஒதியமரத்தைப் பாருங்கள். இது இப்படி பெருகி வளர்கின்றது; என்ன பிரயோசனம். இது பெருத்துத் தூண் ஆகப்போகிறதா. மேலும் மற்ற மரங்களெல்லாம் பச்சைப்பசேலென்று பூத்துத் தழைத்திருக்கிற இந்தக் காலத்தில் இந்த ஒதியமரமானது, சுற்றிலும் பசுமையாக இருக்கிற இனத்தாரைக் கண்டு பொறாமையடைந்து பின்னும் தரித்திரத்தால் அழிந்துபோகிற மனிதர்களைப்போல் இலைமுதலிய ஒன்றுமில்லாமல்கட்டைத்தடியாக நிற்கின்றது. இன்னும் இந்த ஒதியமரமானது, அநேகர் நிறைந்திருக்கிற சபையிலே ஆடைகுலைந்தும் மானமில்லாமலும் நிற்கின்ற அறிவிலிகளைப்போலவும் காணப்படுகின்றது. அதன்பக்கத்தில் நிற்கிற பனைமரத்

லைப் பாருங்கள். "தேம்படுபனையின் திரள்பழத் தொருவிதை வானுறவோங்கி வளம்பெற வளரினும் ஒருவர்கிருக்க நிழலாகாதே" என்பதாக இந்த மரத் தைப் பழித்தலாகாது. இதன் ஓலையைக்கொண்டு கூரைவேய்ந்தால்ஒருவரல்ல, ஆயிரம்பேர்க்கும் நல்ல நிழலைத் தருமல்லவா. "கிழமைப்படவாழ்" என் கிற வாக்கியத்துக்கு இராமாநுஜகவிராயர் என்கிற பெரிய வித்துவானனவர் "உன் உடம்பாலும் பிறரு க்குக பயன்படும்படி வாழவேண்டும்" என்று அர்த் தம் சொல்லியிருக்கிறார். அந்த வாக்கியத்தின் அர்த் தத்தை இந்தப் பனையினிடத்தில் தான் நான் கண் டிருக்கிறேன். மனிதர்கள் புத்தி உடையவர்களாக இருந்தும் ஒவ்வொரு உபகாரம்செய்வது கஷ்டமாக இருக்கிறது: சில பெரியமனிதர்கள் வாய்திறந்து வா சா கைங்கரியஞ் செய்வதுகூட கஷ்டமாக இருக்கி றது: அல்லவென்று கொஞ்சம் செய்தாலும் அக்கி ராரத்து நாயைப்போல பிரதிஷ்டைக்கே செய்கிற வர்களாக இருக்கிறார்கள். அதிலும் சிலர் எதிரிக ளால் கொஞ்சநஞ்சம் பிரதியுபகாரத்தை நோக்கியே செய்கின்றவர்களாய் இருக்கிறார்கள். பனங்கிழங்கை மண்ணின்கீழே போட்டுவிட்டால் அதன்மேல் ஒரு கரண்டி தண்ணீர்கூட விடுவதில்லை. அப்படியிருந் தும் அது, எத்தனை கஷ்ட நிஷ்ரேங்களையும் பொறு த்துக்கொண்டு வளர்ந்து பெருமை அடைகின்றவர்க ளைப்போல, ஓங்கிவளர்ந்து, ஒரு பிரதியுபகாரத்தை யும் வேண்டாத தலைவள்ளல்களைப்போல, பல பல விதமான பயன்களைத் தருகின்றது. இதனால்தான் இந்த மரத்தைப்பழைய வித்துவான்கள் பூலோக கற் பதரு என்று சிறப்பாகப் புகழ்ந்தார்கள். இன்னும் இங்குள்ள மற்ற மரங்களையும் பாருங்கள். இந்தச் சோலையில் இருப்பது இப்பொழுது எனக்கு எப்படி யிருக்கிறதென்றால், "உள்ளேவயிறெரிய உதடுபழஞ் சொரிய" என்பதற்கு விரோதமாய் மனப்பூர்த்தியுட னேமுகமலர்ந்து விருந்திடுகின்றவர்களுடைய வீட்டி லே இருக்கிறதுபோல அதிக சந்தோஷமாக இருக் கிறது. அதோ அந்தக் குளத்தைப்போய்ப் பார்க்க லாம் வாருங்கள்.——இந்தக் குளத்தின் தண்ணீ ரைப் பார்த்தீர்களா, எப்படி கண்ணாடியைப்போல மாசுமருளில்லாமல் தெளிவாக இருக்கிறது. கள்ளங் கபடு, சூதுவாது அறியாதவர்களுடைய மனங்கூட இப்படித்தான் துல்லியமாக இருக்கும். அப்படிப் பட்டவர்களுடைய சிநேகமானது எப்படி மனத்தின் கெடுதியைப் போக்கி நன்மையைக் கொடுக்குமோ அதுபோலவே இந்தக்குளத்தின் தண்ணீரானது, குடிக்கவும் குளிக்கவும் உபயோகப்படுத்தினால், உட ம்பின் வியாதியைப்போக்கி சுகத்தைக் கொடுக்கும். இந்தக்குளத்தில் இருக்கிற தாமரையைப்பாருங்கள். இந்தத் தாமரைப் புஷ்பங்களின் குணம் என்னவென் றால்:—பொழுது விடியும்போது மலர்வதும் பொழு துபோகும்போது மூடிக்கொள்வதுமாம். இந்தத் தாமரை மலர்களின்மேல் சஞ்சரிக்கின்ற அன்னப் பறவைகளைப் பாருங்கள்: கிடைத்தமட்டில் திருப்தி யடைந்து, வீண் விவகாரங்களில் பிரவேசிக்காமல் சத்காலக்ஷேபஞ் செய்கிறவர்களைப்போல, மனச்சஞ் சலமில்லாமல் குலவிக்கொண் டிருக்கின்றன. நல் லது, இந்த நெல்லிமரங்களின் நிழலில் உள்ள மணல் மேட்டில் உட்காரலாம் வாருங்கள். என் தங்கை பள்ளிக்கூடம் போய்ப் படித்த வரலாற்றைச் சொல் லுகிறேன் கேளுங்கள்.

என் தங்கைக்கு எட்டுவயதாகும்போது ஒருநாள் என் தகப்பனார் என்னையும் என் தங்கையையும் காற் றுவாங்கும் பொருட்டாக உலாவி வரலாமென்று அழைத்துக்கொண்டு போனார். போகும்போது எங் கள் தெருவிற்கு மூன்றாவது தெருவிலிருந்து சிறு பெண்கள் எண்மரும் பதின்மருமாக கும்பல் கும்ப லாய் வருவதைக் கண்டு என் தங்கையானவள் தகப் பனாரை நோக்கி "இந்தப் பெண்கள் எங்கிருந்து வரு கிறார்கள்?" என்று கேட்டாள்.

தகப்பனார் "இவர்கள் ஹிந்துபாலிகா பாடசாலை யில் படிக்கிற பெண்கள்" என்றார்.

என் தங்கை—"பாலிகாபாடசாலையா?"—

"அதென்ன?" என்று கேட்டாள்.

தகப்பனார்—"பாலிகாபாடசாலை"என்றால் பெண் கள் படிக்கிற பள்ளிக்கூடம்.

என் தங்கை—"அட! இத்தனைநாளாக, பெண்கள் பள்ளிக்கூடம்போய் படிக்கிறசங்கதி எனக்குத் தெரி யாதே. எல்லாரும் என்னைப்போல வீட்டில் தாய் தகப்பன்மாரிடத்திலும் அண்ணன் தம்பிமாரிடத்தி லும் படிப்பார்கள் என்றல்லவோஇருந்துவிட்டேன். என்னையேன் அங்கே அனுப்பவில்லை."

தகப்பனார்—"இத்தனைநாள் நீ சின்னஞ்சிறிய குழ ந்தையாயிருந்தாய். அதனால் வீட்டிலே பாடஞ்சொ ல்லிக்கொண்டு வந்தேன்."

என் தங்கை—"இந்தப்பெண்கள் கையில் குடை யும் காலில் ஜோடும் அக்குளில் புத்தகக் கட்டுமாகப் போகிறதைப் பார்த்தால் எனக்கு அந்தப்படியே செ ய்ய ஆசையாக இருக்கிறது."

தகப்பனார்—"நல்லது பார்க்கலாம்."

என் தங்கை—"நாளைக்கே போகவேண்டும். இல் லாவிட்டால் இராத்திரிக்கு தூங்கமாட்டேன்."

தகப்பனார்—"சாயரக்ஷை வீட்டிற்குப் போனவுட னே உன்னுடைய தாயாரைக் கேள். அவள் சம்ம தித்தால் அனுப்புகிறேன். ஆனால்—"

என் தங்கை—"அதெல்லாங் கூடாது. நாளைக்கு எப்படியானாலும் நான் போகவேண்டும்."

தகப்பனார்—"இப்போது புரட்டாசி மாசம், பாடங்களெல்லாம் முக்கால்பங்கு ஆயிருக்கும். தை மாசத்தில் பள்ளிக்கூடம் இருக்காது. சங்கராந்திக்காக விடுமுறை விடுவார்கள். மாசி மாசத்தில் பள்ளிக்கூடந் திறந்து அந்தந்த வகுப்பில் முதலிருந்து பாடங்கள் நடக்கும். நீயும் அப்போதுபோய்ச் சேர்ந்தால் கிரமமாகப் படிக்க முடியும்."

என் தங்கை—"அப்படியானால்நான்போய் படிக்க வேண்டிய பாடங்களை இதுமுதற்கொண்டு எனக்குச் சொல்லிக்கொடுக்க வேண்டும்"

தகப்பனார்—"நல்லது ஆகட்டும்"

இப்படியாகப் பேசிக்கொண்டே நாங்கள் வரும்போது நான் "நாயனா! நான் எப்போது பள்ளிக்கூடம் போகிறது?" என்றேன்.

அதற்கு அவர் "அப்பா! உனக்கு அவசரம் ஒன்றும் இல்லை. பெண்கள் பனிரண்டு வயதுக்குமேல் பள்ளிக்கூடம்போக உதவாது. ஆகையால் அவர்கள் சீக்கிரம் பள்ளிக்கூடத்தில் படிக்க வேண்டியவைகளைப் படிக்கவேண்டும். ஆண்பிள்ளைகள் எப்படியும் பத்துவயதில் பள்ளிக்கூடம்போகலாம்" என்றார்.

நானும்சரிதானென்று பேசாமலிருந்து விட்டேன்.

நாங்கள் வீட்டுக்கு வந்தவுடனே எங்கள் அத்தையம்மாள் எங்கள் வீட்டுக்கு வந்திருந்ததைக்கண்டு அதிகசந்தோஷமாய்க் குதித்துக்கொண்டே அவர்களிடம் ஓடினோம். அவர்கள் எங்களிருவரையும் கையில் ஒருவராக அணைத்துக்கொண்டு முத்தங்கொடுத்து பின்பு மடியிலிருந்து ஒவ்வொரு பணியாரப் பொட்டிலம் எடுத்துக் கொடுத்தார்கள்.

எங்கள் தகப்பனார் கை காலலம்பிக்கொண்டு கூடத்தில் ஒரு நாற்காலியின்மேல் உட்கார்ந்துகொண்டு எங்கள் அத்தையைப் பார்த்து "அம்மா! எப்போது வந்தாய்" என்று கேட்டார்.

அத்தையம்மாள்—"நான் வந்து அரைநாழி யாகிறது" என்றார்கள்.

தகப்பனார்—"அத்தானவர்கள் எப்படி யிருக்கிறார்?"

அத்தை—"க்ஷேமமாயிருக்கிறார். உங்களைப் பார்க்க வேண்டுமென்று அதிக அவாவாக இருக்கிறார். பொங்கல் கழித்து வருவார்"

தகப்பனார்—"அம்மா! ஆநந்தவல்லி! குழந்தைகள் எப்படி யிருக்கிறார்கள்? அவர்களை ஏன் அழைத்து வரவில்லை?"

அத்தை—"குழந்தைகள் க்ஷேமந்தான். அதுகள் தகப்பனையும் பாட்டியாரையும் விட்டுவரமாட்டோமென்றதுகள். அதன்மேல் நான் மாத்திரம் தம்பியைத் துணைகூட்டிக்கொண்டுவந்தேன்."

தகப்பனார்—"ஆறுமுகம் என்ன படிக்கிறான்? விசாலாக்ஷி பள்ளிக்கூடம் போகிறாளா?"

அத்தை—"ஆறுமுகம் பள்ளிக்கூடம் போகிறான்: அவன் படிக்கிறது என்னமோ இரண்டாவதோ மூணாவதோ கிளாஸ் என்று சொன்னான். விசாலாக்ஷிக்கு அத்தானவர்கள் வீட்டில் என்னமோ கொஞ்சம் சொல்லிக்கொடுக்கிறார். ஆனாலும் அவளுக்கென்ன, அல்லியரசாணிமாலை - ஏணியேத்தம் - பவழக்கொடிமாலை இதெல்லாம் படிக்கத்தெரியாது. என்னமோ முதல் பாடமாம். அஞ்சாம்பாடமாம். பவுண்டு ஷலிங்கு பென்சாம். அப்புறம் வந்து——"

இதற்குள் என்தங்கை ஓடிவந்து "அத்தே அத்தே! நான் மாசிமாசம் பள்ளிக்கூடம்போகப்போகிறேன். அண்ணாத்தை இப்ப இல்லை: இன்னம் இரண்டு வருஷம் கழிச்சி போகப்போகுது. விசாலாக்ஷியை இங்கே அனுப்பிவிட்டால் நாங்க இருவரும் ஒண்ணு பள்ளிக்கூடம் போவோம்" என்று சொன்னாள்.

அத்தையம்மாள்—"என்னாங்கண்ணாத்தே! இதென்ன என்மருமகனை எப்போ பள்ளிக்கூடம் அனுப்பப் போறீங்கோ?"

தகப்பனார்—"அவனுக்கு பத்துவயசாக வேண்டும்."

அத்தை—"ஆ! நல்ல கொள்ளை. ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா. பள்ளிக்கூடத்திலே மசிய வேண்டாமா. 'பிள்ளைக்கு வாத்தியாரும் பெண்ணுக்கு மாமியாரும்' என்பாங்க. பெண் எப்படியும் மாமியாரிடத்தில் வட்டத்திற்கு வந்துவிடும். பள்ளிக்கூடம் படிக்கிறபெண்கள் எனக்கு சரிப்படாது: அவர்கள் ராங்கிதீர்ந்து போகிறார்கள். பிள்ளையை யல்லவா பள்ளிக்கூடம் அனுப்பவேணும்."

இப்படி பேசிக்கொண்டிருக்கும் போது எங்கள் தாயார் எல்லாரையும் சாப்பாட்டுக்கு அழைத்தார்கள், நாங்கள் சாப்பிடப்போய் விட்டோம். நல்லது வெய்யிலாகிறது. மற்ற வரலாற்றை இன்னொருநாளைக்குச்சொல்லி முடிக்கிறேன். வாருங்கள் வீட்டுக்குப் போகலாம்.

கிழவன்.

## விசேஷக்குறிப்பு.

### நமதுபத்திரிகை.

இந்த மாசமும் விவேகசிந்தாமணிக்குக் குறித்த 32-பக்கத்திற்குமேல் 8-பக்கம் அதிகமாகச் சேர்க்க நேரிட்டிருக்கிறது. தொடர்ந்துவந்த சில முக்கியமான விஷயங்களை முதல் வருஷம் முடியும் இந்த சஞ்சிகையில்தானே ஒருவாறுமுடிக்கவேண்டியதாகவிருந்ததால் சிலவிஷயங்கள் மிக நீண்டோடிவிட்டதுபற்றி அதிகப்படி பக்கங்கள் சேர்க்கவேண்டியதவசியமாக நேரிட்டது. அதுகாரணமாகவே இந்த மாசத்துப் பத்திரிகை வெளிவருவதும் கொஞ்சம் தாமதிக்கலாயிற்று.

அடுத்த சஞ்சிகையோடு விவேகசிந்தாமணி இரண்டாவதுவருஷத்து முதல்நெம்பர் சஞ்சிகை துவக்கமாகிறது. இதுவரையில் அந்தந்தமாசத்து சஞ்சிகை அடுத்தமாசம் முதல்வாரத்தில் வெளியாகி வந்தது. அடுத்துவரும் மேமீத்து சஞ்சிகை முதல் அந்தந்த மாசத்திலேயே பிரசுரிக்கத் தீர்மானித்து அதற்குவேண்டிய ஏற்பாடு செய்திருக்கிறோம். புது ஏற்பாட்டுப்படி 1893ஷு மேமாசத்து சஞ்சிகை இந்த மேமீ 20 அல்லது 25உ வாக்கில் பிரசுரிக்கப்படும். விவேகசிந்தாமணிக்கு விஷயமெழுதுவோர் அவர்கள் அனுப்பும் விஷயம் எந்தமாசத்துச் சஞ்சிகையில் வெளியாகவேண்டுமென்று விரும்புகிறார்களோ அதற்கு முன்மாசம் 20உக்குள் அவர்களெழுதிய விஷயங்கள் நமதுகையில் வந்து சேரும்படி தயவுசெய்து முன்னிட்டு அனுப்புவார்களென்று கோருகிறோம். நமக்கு சொந்த அச்சுக்கூடமின்று. நமது பத்திரிகையை கூலிக்கு அச்சிட்டுப் பிரசுரிக்கவேண்டியிருப்பதால் இப்பத்திரிகைக்கு எழுதும் கனவான்கள், இதற்கு எழுதுவதாற் செய்யுமுதவியோடு, நாம்மேலே கேட்டுக்கொண்ட அதிகப்படி யுபகாரமும் செய் துதவ மனமுவப்பார்களென்று நம்புகிறோம்.

இதுவரையில் நமது பத்திரிகைக்கு எழுதிவந்த கனவான்களுக்கும்,நமதுசபைக்கு உபகாரிகளாயிருந்துதவிய கனவான்களுக்கும் நமது பத்திரிகையை வாங்கி ஆதரித்துவந்த கையொப்பக்காரர்கள் அத்தியக்ஷர்களாகிய கனவான்களுக்கும் நாம் நமது ஹிருதயபூர்வமான வந்தனமளிப்பதோடு இவர்களெல்லாரும் இதுவிஷயத்தில் ஒத்துநின்று அடுத்த வருஷத்திலும் நமக்குக் கைகொடுத் தாதரிப்பார்களென்று ஒவ்வொருவரையும் விநய பூர்வமாய்க் கேட்டுக்கொள்கிறோம். நாம் இப்பத்திரிகையைத் துவக்கியபொழுது ஒருவருஷகாலத்திற்கு என்ன நஷ்டம் வரினும் இதைக் கைவிடாமல் தொடுபிடியாய்த் தொட்டு நடத்தி, இவ்வித பத்திரிகை யொன்றிருக்கவேண்டியதவசியந்தானுவென்று பரீக்ஷை பார்த்திடுவோமென வெளியிட்டோம். நாம் கொடுத்த வாக்குக்குக் குறைவின்றி குறித்த ஒருவருஷகாலமும் கழிந்ததைப் பற்றி மிகச்சந்தோஷப்படுகிறோம். இந்த ஒருவருஷ அனுபவத்தில் இப்பத்திரிகை எல்லா ஜனங்களுக்கும் உண்மையில் அறிவைப் பரவச்செய்யத்தக்கதாவதற்கு இன்னும் எவ்வளவோ சீர்திருத்தங்களும் அபிவிர்த்தியும் செய்யவேண்டுமென்று நாமறிந்து கொண்டதோடு, இவ்விதமான பத்திரிகையொன்று நிலைபெற்று நடந்துவர வேண்டியது அத்தியாவசியகமென்றும் ஐயந்திரிபற அறிந்துகொண்டோம். ஆனால் பத்திரிகை செலவுக்கு வரவு கட்டிவராமல் அதை நடத்துவோர்க்கு நஷ்டமுண்டுபண்ணுவதாக விருக்கிறது. முதல் வருஷத்தில் நமக்கு நேர்ந்த நஷ்டத்தைப்பற்றி நாம் முறையிடவில்லை. இந்த இரண்டாவது வருஷத்திலாவது இப்பத்திரிகை அதன்மட்டிற்குப் பிடிக்கும் செலவுக்கேற்ற வரவுள்ளதாய், அதை நடத்துவோர்க்கு ஒரு பெரும் பாரமாயில்லாமலிருந்தால் அதுவே நமக்குப் போதுமானது. இது விஷயமாக நாம் பட்ட சிரமத்துக்கும், மனக்கவலை, விசாரங்களுக்கும் அதுவே போதுமான வெகுமானமாம். இப்பத்திரிகை நிலைபெற்று நீடுழிவாழ்ந்து அது ஸ்தாபிக்கப்பட்ட நோக்கத்தை நிறைவேற்றிவரத் தக்கதாயிருப்பின், அதுவே நாம் இன்னமும் இதுவிஷயத்தில் வேண்டிய சிரமமெடுத்துழைத்துவரப் போதுமான தூண்டுதலாகும்,

நாம் நமது தேக மனோசக்திக்கு இசைந்தவாறு நம்மாலானமட்டும் இப்பத்திரிகையை முன்னுக்குக் கொண்டுவர விடாபிடியாக வுழைத்துவர எப்போதும் சித்தமாகக் காத்திருக்கிறோம். பத்திரிகை யாரம்பித்ததுமுதல் நமது முயற்சியை யாதரித்து இது விஷயம் கடைத்தேறுவதற்கு வேண்டிய உதவிகள் யாவும் புரிந்துவந்த கனவான்கள் யாவரும் மத்தியில் கைவிடாது நின்றுதரிப்பார்களென்றும் உறுதியாய் நம்புகிறோம். அவர்கள் ஆதரவின்றி நாம்நமது அற்ப சக்தியைக்கொண்டு செய்யும் யத்தனங்கள் யாவும் பயன்பெருதொழியு மென்பது திண்ணமே. ஆதிமுதல் நாம் நம்மிலும் பெரியோர் உதவி இந் நல்விஷயத்தில் நமக்குச் சித்தமாய்க் கிடைக்குமென்னுமுறுதியான நம்பிக்கையாலே இம்மகா பெரியவிஷயத்திற் பிரவேசிக்கலானோம். இன்னமும் அந்நம்பிக்கையுறுதியாலே இது விஷயத்தில் தொடர்பிடியாக நின்று முயற்சிக்கத் துணிகிறோம். கடந்தகாலத்தில் நமது நம்பிக்கை மோசம்போகவில்லையென்று கண்டோம். இனி வருங்காலத்திலு மப்படியே சித்திக்குமென்று நம்புகிறோம். நம்பியே இப்பத்திரிகையைத் தொடர்ந்து நடத்தத் துணிகிறோம். அறிவைப் பரவச்செய்யும் விஷயத்தி லபிமானமுள்ள எல்லாரும் ஆளுக்குக் கொஞ்சமாகக் கைகொடுத்து இப்பத்திரிகையின் நோக்கம் நிறைவேறுங்காரியம் இனிதுமுடியுமாறு அவரவர்க்கு இசைந்தமட்டி லுதவிபுரிந் தாதரிப்பார்களென்று பிரார்த்திக்கிறோம்.

இப்பத்திரிகையை இந்தமாசத்து சஞ்சிகை முதல் வெளிஜில்லாக்களிலுள்ள லோகல்போர்டுகள் விசாரணையிலிருக்கும் பாடசாலைகளெல்லாம் அனேகமாக வரப்பெற்று வருவார்கள். பலதாலூகா போர்டுகள் ஏற்கனவே அவர்கள் ஆதரவின்கீழுள்ள பாடசாலைகளுக்குத் தக்கபடி இப்பத்திரிகையில் பல பிரதிகள் வாங்கத் தீர்மானித்து அந்தப்படி சில தாலூகாபோர்டு ப்ரெஸிடெண்டுகள் உத்தரவுமனுப்பிவிட்டார்கள். மற்றும் சில தாலூகாபோர்டு ப்ரெஸிடெண்டுகளின் உத்திரவு சீக்கிரத்தில் கிடைக்கு

மென்று எதிர்பார்க்கிறோம். இன்னும் சில தாலூகா போர்டார்கள் இது விஷயமாய் அவர்களுக்கு நாமெழுதிய கடிதத்திற்கு இன்னும் பதிலெழுதவில்லை. இப்பத்திரிகை 4-வது, 6-வது டிவிஷன் அஸிஸ்டெண்ட் ஸ்கூல் இன்ஸ்பெக்டர்களால், லோகல் பண்டு பாடசாலைகளுக்கு உபயோகமானதாக ஏற்கனவே சிபார்சு செய்யப்பட்டிருக்கிறது. இப்பத்திரிகை கிடைக்கப்பெறாத லோகல்பண்டு ஸ்கூல்மாஸ்டர்கள் சேர்ந்து அவரவர்கள் தாலூகா போர்டு ப்ரெஸிடெண்டுகளுக்கு விண்ணப்பம் செய்துகொண்டால் போர்டார் செலவில் இப்பத்திரிகை வரப்பெற்றுக்கொள்ளலாம். லோகல்பண்டுகளி லிருந்து யாதொரு உதவியும் பெறாத அந்தரங்க பாடசாலைகளின் தலைவர்கள் தங்கள் சொந்தத்தில் இப்பத்திரிகையை வாங்க ஐவேஜ் போதாமலிருந்தால், அவர்களுக்கு லோகல்பண்டிலிருந்து 'கிராண்டு' மூலமாகத் திரவியசகாயம் கிடைக்குமட்டும் இப்பத்திரிகை அவர்களுக்குக் கொஞ்சம் சரசமாகக் கிடைத்துவர ஏற்பாடு செய்யப்படும். இவ்வேற்பாட்டால் பயன்பட விரும்பும் ஸ்கூல் தலைவர்கள் தங்கள் ஸ்கூலுக்கு சர்க்காரிலிருந்தாவது, லோகல்பண்டிலிருந்தாவது யாதொரு உதவியும் கிடைக்கவில்லையென்பதற்கு ஆத்[illegible]யாக--குறிப்பு அல்லது 'ஸர்டிபிகேட்' ஒன்று கூடவைத்து எழுதிக்கொள்ளவேண்டும்.

பழையகையொப்பக்காரர்களில் பத்திரிகைவேண்டாமென்று தெரிவிக்காதவர்க்கெல்லாம் அடுத்தவருஷத்திற்கும் பத்திரிகை தொடர்ச்சியாய் அனுப்பப்பட்டுவரும். அடுத்தவருஷத்திற்கும் கையொப்பக்காரர்களாயிருக்க விரும்பிப் பத்திரிகை பெற்றுக்கொள்கிறவர்கள் அடுத்தவருஷத்துக்குரிய சந்தாதொகையை முன்பணமாகக் கட்டிவிடவேண்டும். வருகிற ஜுலை மாசம் முடிவதற்குள் 2-வது வருத்திற்கு முன்பணம் கட்டாதவர் வருஷம் 1-க்கு ரூபா 4-விகிதம் சந்தா செலுத்தவேண்டிவரும். இந்த மூன்றுமாச கெடுவிற்குள் கட்டிவிட்டால் வருஷம் 1-க்கு ரூபா 3. 6மீ த்துக்கு ரூபா 1—12—0; இந்தவருஷம் முதற்கொண்டு முன்பணம் கட்டவேண்டிய இவ்விதியைக் கண்டிதமாகஅனுஷ்டானத்திற்குக் கொண்டுவரத் தீர்மானித்திருப்பதால் குறைந்தசந்தா விகிதப்படி பணங்கட்ட விரும்புவோர் காலதாமதம் செய்யாமல் குறித்த தவணை கழிவதற்குள் அவர்கள் சந்தா தொகையை முன்பணமாகக் கட்டிவிடக் கோருகிறோம்.

போனவருஷத்துச் சந்தா பாக்கிவைத்துக்கொண்டிருப்பவர்கள் இந்தமாச முடிவதற்குள் பணமனுப்பாவிட்டால் அவர்சளிடத்திலிருந்து வருஷத்துக்கு ரூபா 4-விகிதம் சந்தா வசூல் செயய்படும்.